

ஏறு மயிலேறி விளையாடு முகம் ஒன்றே
ஈசருடன் ஞானமொழி பேசும் முகம் ஒன்றே
கூறுமடியார்கள் வினை தீர்த்த முகம் ஒன்றே
குன்றுருவ வேல் வாங்கி நின்ற முகம் ஒன்றே
மாறுபடும் சூரரை வதைத்த முகம் ஒன்றே
வள்ளியை மணம்புரிய வந்த முகம் ஒன்றே
ஆறுமுகமான பொருள் நீ அருள வேண்டும்.

-திருப்புகழ்.

# ஸப்தகிரி

ஆகஸ்ட் - 1991


தனிப்பிரதி ரூ. 1 மலர் 22

வருடச்சந்தா ரூ. 12 இதழ் 3


## உள்ளுறை

பக்கம்



அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டைமற்றும் பின்னட்டையில் : 'புஷ்கர' விழா கொண்டாடப்பெறும் கோதாவரி நதியும் அதன் கரை மீது அமைந்துள்ள திருக்கோயில்களும்

2-வது பக்கம் : திருமலையில் பவித்ரோத்ஸவம்

3-வது பக்கம் : ஸ்ரீவரலக்ஷ்மி


சிறப்பாசிரியர் :
திரு. எம்.வி.எஸ். பிரஸாத், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

அச்சிடுபவர்:
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்:
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.,

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


JAGADISH

# உங்களுடன்...

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் எனும் ஐம்பூதங்களின் சேர்க்கையே உயிர்களின் தோற்றம். இப்பேருண்மையை அறிந்து தெளிந்தே மானுடம் அவற்றை வழிபடத் தொடங்கியது. அக்னியின் மறுஉருவமான சூரியனை வழிபடுவது என்பது பெரும்பாலான உலகச்சமயங்களிடையே இருந்துவரும் தொன்மையான வழக்காகும். அதிலும் இந்து சமயம் அக்னி வழிபாட்டின் - சூரிய வழிபாட்டின் பெருமையைப் போற்றிவருவதை இதிஹாஸங்களும், புராணங்களும், சமய இலக்கியங்களும் நமக்குச் சுட்டிக் காட்டும். ஒளி வழிபாடு இன்றி இந்து சமய பூஜைகள் நிறைவுறு. அதேபோன்று பூமி பூசையும் நமது இந்து கலாசாரத்தில் குறிப்பிடத்தகுந்த இடம் பெற்றுள்ளது. இவ்வகையில் இறைவனுக்குத் தூயதாய் சமர்ப்பிக்கப்படும் "பத்ரம், பலம், புஷ்பம், தோயம்" எனும் பொருட்களில் தோயம் எனப்படும் நீர் இந்து சமய வழிபாட்டிலும், வைதிகச்சடங்குகளிலும் பெரிதும் இடம் பெறுகின்றது.

'நீரின்று அமையாது இவ்வுலகம்' எனும்படி உயிர்களின் ஜீவாதாரமாக நீர் விளங்குவதால் அந்நீரினுக்கு மக்கள் தரும் மதிப்பு அளவிடற்கரியது. உயிர்களின் அழுக்கினைப் போக்கி, தாகத்தினைத் தீரத்திடும் நீரினை இந்து சமயம் இறைவனின் பிரதிநிதியாகவே கருதுகின்றது. கடல்களையும், நதிகளையும், அருவிகளையும் சமயத்தோடு தொடர்புபடுத்தி, அவற்றிற்கு விழா எடுப்பித்து, அவற்றின் அருகே கோயில்களைக் கட்டி, நீரினையும் அவ் இடங்களையும் புண்ணியத் தீர்த்தங்களாகவும், புண்ணிய ஸ்தலங்களாகவும் நமது மூத்தோர் அழைக்கவும் செய்தனர். 'சிறப்போடு பூசனை செல்லாது வானம் வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு' எனும் வள்ளுவன் வாய்மொழிக்கேற்ப, மழை பொய்த்திடின் விழாவும், வழிபாடும் நின்றிடும் என்றும், மற்றொரு பா மூலம் தானமும், தவமும் பயனற்றுப் போய்விடும் என்றும் கூறியதற்கிணங்க 'நீர்' வாழ்க்கையில் அமுதூற்றாகவும், உயிர்மூச்சாகவும் விளங்குவதால் அந்நீரினை, வாழ்க்கையினையே சமயமாகக் கொண்டு திகழும் இம்மண், வழிபட்டு வருவதில் வியப்பொன்றுமில்லைதான்

தெய்வநதி, ஆர்ஷநதி, மானவ நதி, அஸுர நதி என்று நதிகளை வகைப்பிரித்து அந்தந்த நதிகளில் குளிக்கும் நேரங்களையும், அதனாற்றான் விளையும் பலன்களையும், அதுபோன்று மேற்கொள்ள வேண்டிய வைதீக விதிகளையும் பகுத்து வகுத்து, நீரினுக்கும் மனிதனுக்கும் உள்ள புனித உறவினை மேலும் வலுப்பெறச் செய்தனர் நமது ஆன்றோர். நாட்டில் கணக்கற்ற நதிகள் குறுக்கும் நெடுக்குமாய் பாய்ந்தோடினாலும், அவற்றுள் மாறிவரும் பருவநிலைகளுக்கேற்ப சுருங்கியும், விரிந்தும் ஆனால் என்றும் வற்றாத நதிகளில் பன்னிரெண்டினை ஜீவநதிகளாகக் கொண்டு, அந்நதிகளுக்குப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பெருமளவில் "புனல்விழா" ஏற்படுத்தி அதன்மூலம் மக்களிடையே சமய ஒருமைப்பாட்டு உணர்வினையும், கலாச்சார ஒற்றுமையினையும் வளர்க்க இந்து சமயம் வழிவகுத்தது.

சூரியனுடன் குருவானவன் ஒவ்வொரு ராசியிலும் அடியெடுத்து வைக்கும் போது அவ்வவ் ராசிக்குரிய நதிகளுக்கு "புனல்விழா" எடுப்பது என்பது புராணம் கூறும் செய்தியாகும். இவ்வகையில் 12 ஆண்டுகளுக்குப் பிறகு இம்மாதம் 14ம் தேதி சூரியனுடன் குருவானவன் கோதாவரி நதிக்குரிய சிம்மராசியில் நுழைவதால், நுழையும் முதல் 12 நாட்களின் போதும், விலகும் இறுதி 12 நாட்களின் போதும் 'கோதாவரி புஷ்கரம்' எனும் புனல்விழா

(48-ம் பக்கம் பார்க்க)



காக்கும் கடவுளாகிய திருமாலின் திருநாமம் நமோ நாராயணம். இந்நாமம் தன்னைச் சிந்தித்தவர்க்கு உயர்ந்த குலத்தைக் கொடுக்கும்; செல்வத்தைக் கொடுக்கும்; அடியார் துய்த்தே கழித்தற்குரிய துன்பங்கள் எல்லாவற்றையும் தரைமட்டமாக்கி விடும்; திருநாட்டைக் கொடுக்கும்.; அருளோடு கூடத் தொண்டாகிய பெரிய நிலையினையும் நல்கும்; தன்னைத் துய்ப்பதற்கு ஈடான ஆற்றலைக் கொடுக்கும்; மற்றும் உள்ள எல்லா நன்மைகளையும் செய்தளிக்கும், ஈன்ற தாயாரை விட நன்மை யானவற்றைச் செய்யும்.

குலம்தரும்; செல்வம்
தந்திடும்; அடியார்;
படுதுயர் ஆயின எல்லாம்
நிலம்தரஞ் செய்யும்; நீள்விசும்
பருளும்;
அருளொடு பெருநிலம் அளிக்கும்;
வலம்தரும்; மற்றும் தந்திடும்;
பெற்ற
தாயினும் ஆயின செய்யும்,
நலம்தரும் சொல்லை நான்
கண்டு கொண்டேன்
நாராய ணாஎன்னும் நாமம்.

(பெரிய திருமொழி-1:1:9)

என்பது திருமங்கையாழ்வார் பாசுரம்.

# நலம் தரும் நாராயண கவசம்

டாக்டர் வே.இரா. மாதவன் - தஞ்சாவூர்.

நமோ நாராயணுய என்னும் இம்மந்திரம் எல்லாப் பேறு களையும் கொடுக்க வல்லது. ஆகையால் இம்மந்திரப் பொருளை எப்பொழுதும் சிந்திப்போருக்கு எல்லா நன்மைகளும் உண்டாகும் என்பது ஆன்றோர் வாக்கு.

"........எனக்கு என்றும்,
தேனும் பாலும் அமுதும் ஆய
திருமால் திருநாமம்
நானும் சொன்னேன்; நமரும்
உரைமின் நமோநா ராயணமே"
(பெ. தி. 6:10:6)

எனத் தாம் பெற்ற அனுபவத்தைச் சொல்லி, தீவினைக்கு நஞ்சாகும் திருமாலின் திருப்பெயரைச் சிந்திக்குமாறு வேண்டுவர் திருமங்கையாழ்வார்.

இவ்வாறே திருமாலின் பன்னிரு நாமங்களையும் சொல்லி வணங்கினாலே போதும், அவன் உயர்பதத்துறலாம்.

கேசவன் நாராயணன்
உயர்மாதவன்
கிளர்கோ விந்தன் விண்டு
மாசகன் மதுசூதன் திருவிக்ரமன்
மன்னு வாமன் அவிர்மலியும்
தேசுறு நிகரில் சீதரன்
இருடிகேசன்
ஒண்ப துமநா பன்சீர்
வீசிய தாமோதரன் எனஉரைமின்
வினையற உயர்பதத் துறலாம்.

என்பர் புராண பாகவதம் பாடிய நெல்லிநகர் அருளாள தாசர்.

இவ்வாறு ஆழ்வார்கள் தாம் பாடிய பாசுரங்களிலும், பின் வந்த பல இலக்கியங்களிலும், தோத்திர நூல்களிலும் இறைவன் திருநாமங்களைச் சொல்லித் துதிப்பது மரபாக வளர்ந்து வந்துள்ளது.

இவ்வகையில் தோன்றிய கவச நூல்களும் பாடல்களும் மக்கள் தம் வழிபாட்டு மரபில் இன்றும் போற்றத் தக்கனவாக அமைந்திருப்பது குறிப்பிடத் தக்கது.

## கவசம்

கவசம் என்பது மெய்புகுக் கருவி. 'புலி நிறக்கவசம் பூம் பொறி சிதைய' (புறநா. 13, 2) என வரும் புறநானூற்று அடிகளால் இச் சொல் சங்க காலத்திலேயே தமிழில் வழங்கப்பெற்று வந்துள்ளதைக் காணலாம்.

உடலைப் பாதுகாப்பதற்காகப் போருக்குச் செல்லும் வீரர்கள் இரும்புக் கவசம் அணிவது வழக்கம். பதினைந்தாம் நூற்றுண்டினைத் தொடர்ந்து வந்த காலங்களில் தமிழகமெங்கும் போர்கள் மலிந்தன. முகமதியரும் பிறரும் நடத்திய போர்களால் மக்கள் பலர் பல இன்னல்களை அடைந்தனர். இக் காலங்களில் இயல்பாக எழுந்த சமய இலக்கியங்களின் பயனாகச் சிறந்த பக்தி இயக்கங்



களும் தோன்றின. பகைவர்களைத் தம் படைக்கலன்களால் காக்க முற்பட்ட மக்கள் அதே போன்று ஒரு தெய்வ கவசமும் தேடிக்கொண்டார்கள்.

பக்தி உணர்வால் இறைவன் புகழைச் சொல்லிச் சொல்லி அவன் இன்ன இன்ன உறுப்புக்களைக் காப்பானாக என்று இறைவன் திருநாமங்களையே கவசமாக அமைத்துக்கொள்ளும் ஒரு மரபும் ஏற்பட்டது இககால கட்டத்தில் தோன்றிய புராணங்கள் பலவற்றிலும் இத்தகைய கவசங்களைக் கூறக் காணலாம்.



கள்ளழகர் திருக்கோயில் - மேலூர்.

--திருமதி. கமலா மாரியப்பன் - கோவை.

இக்கவசங்களை ஓதி இன்னார் இன்ன நலன்களைப் பெற்றூர்கள் எனப் புராணங்கள் கூறுவதால் பின்வந்த மக்களும் இவற்றை ஓதி நற்பலன் பெற்றூர்கள். இவ்வகையில் முதன்முதலாகச் சிவபுராணங்களில், கவசம் என்னும் இந்தத் தோத்திரப் பகுதி அமைந்திருக்கக் காணலாம்.

முதலில் வடமொழியில் மிகப் பலவாகத் தோன்றிய இத்தகைய கவசங்கள் பின்பு தமிழிலும் தோன்றி நம்பிக்கையுடன் நிலைபெறுவனவாயின. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை வருமாறு-

### சிவகவசம்

வரதுங்க ராம பாண்டியர் பாடிய பிரமோத்தர காண்டத்தில் உள்ள பன்னிரண்டாவது அத்தியாயத்தில் இருபது பாடல்கள் சிவகவசமாகப் பாடப் பெற்றுள்ளன. பத்திராயு என்னும் அரச குமாரனுக்கு விடப முனிவர் அருளிச் செய்ததாக இது அமைந்துள்ளது.

### சக்தி கவசம்

அதிவீரராம பாண்டியர் பாடிய காசி காண்டத்தின் எழுபத்திரண்டாம் அத்தியாயத்தில் பதின்மூன்று பாடல்கள் சக்தி கவசம் என அழைக்கப்பெறும். இது, துரக்கன் என்னும் அசுரனை வதைத்த உமாதேவியைத் தேவர்கள் துதி செய்ததாக அமைந்துள்ளது.

### இலக்குமி கவசம்

காசிகாண்டத்தின் ஐந்தாவது அத்தியாயத்தில் உள்ள ஏழு பாடல்கள் இலக்குமி கவசமாக அமைந்துள்ளது. இது அகத்திய முனிவர் துதிதததாகக் கூறப்பெறும்.

### கந்த சட்டி கவசம்

பதினெட்டாம் நூற்றூண்டில் வாழ்ந்த தவத்திரு தேவராய சுவாமிகள் இயற்றிய இக்கவசத்தைப் பலரும் அறிவர். இது அகவற் பாவால் அமைந்தது.

### விநாயக கவசம்

கச்சியப்ப முனிவர் இயற்றிய விநாயக புராணத்திலுள்ள ஒன்பது பாடல்கள் மிகச்சிறந்த விநாயகக் கவசமாகப் போற்றப பெறும்.

### சண்முக கவசம்

இருபதாம் நூற்றூண்டில் வாழ்ந்த தவத்திரு பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் இயற்றிய சண்முக கவசமும் பலராலும் பாராயணம் செய்யப்பட்டு வருவதாகும் இதில் முப்பது பாடல்களும் மிகச் சிறப்பாக அமைந்துள்ளன.

### திருமால் கவசம்

சிவன், சக்தி, இலக்குமி, விநா

யகர், முருகன் எனப் பல்வேறு தெய்வங்களை வேண்டி கவசங்கள் இயற்றியது போன்றே, காக்கும் கடவுளாகிய திருமாலை வேண்டியும் கவசங்கள் தோன்றியுள்ளன. கந்தர்சட்டி கவசம் போலவே, திருமால் காக்க காக்க என்று வேண்டுகின்ற தொடர்களை அமைத்து அரிகவசம் என்ற ஒரு கவச நூலும் பிற்காலத்தில் இயற்றப் பெற்றுள்ளது.

## நாராயண கவசம்

திருமால் பரமாக வைணவத்தில் இயற்றப்பெற்ற கவசங்களுள் மிகவும் குறிப்பிடத்தக்க கவசம் நாராயண கவசம் ஆகும்.

பதினாறும் நூற்றுண்டில் திருநெல்வேலிப் பதியில் வேப்பற்றூரில் வாழ்ந்த மாதவ பண்டிதர் என்னும் செவ்வைச் சூடுவார் தாம் இயற்றிய பாகவதத்தில் இந்த நாராயண கவசத்தை மிகச் சிறப்பாகப் பாடி அருளியுள்ளார்.

## பாகவதம்

பகவானுடைய வரலாற்றுக் கதைகளைச் சொல்வது பாகவதம். வைணவத்தில் பகவான் என்ருல் சிறப்பாகக் கண்ணபிரானையே குறிக்கும். வடமொழியில் வியாசர் செய்ததாக வழங்கும் பதினெண் புராணங்களில் திருமால் புகழ் கூறும் புராணங்கள் நான்கு. அவை பாகவதம், விஷ்ணு புராணம், நாரதீயம், காருடம் என்பன. இவற்றுள் முதலாவது பாகவதம். இந்த இதிகாச பாகவதம் வடமொழியில் பதினெண்ணுயிரம் ஸ்லோகங்களாக வியாசரால் செய்யப் பெற்றது. இதில் பன்னிரண்டு ஸ்கந்தங்கள் உள்ளன. இதைப் படித்தால் ஞானம் உண்டாகும் என்பது ஆன்ருேர் வாக்கு.

இந்த இதிகாச பாகவதத்தைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார் செவ்வைச் சூடுவார். இதுவும் பன்னிரண்டு ஸ்கந்தப் பாகுபாட்டுடன், நூற்றைம்பத்தைந்து அத்தியாயங்களில் நால்ாயிரத்து தொள்ளாயிரத்து எழுபத்து மூன்று பாடல்களைக் கொண்டு ஒரு பேரிலக்கியமாக அமைந்துள்ளது. இவருடைய நூலை இதிகாச பாகவதம் பாகவத புராணம், விஷ்ணு பாகவதம் எனவும் அழைப்பர்.

செவ்வைச் சூடுவார் பாகவதத்தின் ஆறும் பாகவதத்தில் ஒன்பது அத்தியாயங்கள் உள்ளன. அவற்றுள், நான்காவது அத்தியாயத்தில் உள்ள சுமார் இருபத்தாறு பாடல்களில் இந்த நாராயண கவசம் கூறப்பெறுகிறது.

இந்த அத்தியாயங்களில் அசாமிளன், தக்கன், விச்சுவரூபன் வரலாறுகள் கூறப்பெறுகின்றன. அசாமிளன் வரலாற்றில் நாராயணு என்ற நாலெழுத்தின் பெருமையைப் பல பாடல்கள் பேசுகின்றன.

பத்திசெய் தாயினும்
பகைசெய் தாயினும்
வித்தக னொருவன்பேர்
விளம்பற் காயினும்
ஒத்துநா ராயணு வெனவு
ரைப்பரேல்
கொத்து வெம்பாதகங்
குலைந்து நீங்குமே.

மெய்வினை நீக்குநா லெழுத்து
வெங்கொலை
மைவினைப் பாதக மாற்றி
யங்கிநெய்
பெய்வினை முதலிய பிராயச்
சித்தமாம்
செய்வினைக் குறையையுந்
தீர்க்கு மென்பவே.

முத்தியிற் பொருந்துநா லெழுத்து
முன்னுவோர்ப்
புத்தியி னழுக்கினைப்
போக்கிப் பொய்யறச்
சுத்தமாம் படிமிகத்
துலக்குஞ் சொல்லிய
சித்தமாம் வினைக்குமோர்
சீவ னாகுமே.

தும்மினும் இருமினும்
துயர மிக்குளம்
விம்மினும் வீழினும்
வினைசெய் போதினும்
அம்மவிந் நாலெழுத் தறைவ
ரேலவர்
செம்மலர் மால்பதஞ்
சேர்தல் திண்ணமே.

(1. அசாமிளன் கதையுரைத்த
அத்தியாயம்,
பா.17-20) (1382-1385)

என இவ்வாறு நாராயணு என்னும் திருநாமத்தின் சிறப்பை விளக்கிவரும் ஆசிரியர் இத்திருநாமம் செபித்தமையால் இந்திரனே பேறு பெற்ருன் என விவரிப்பர். இந்திரன் அவுணரோடு செய்த போரில் வெற்றி பெற்றதற்கு இந்த நாராயண கவசத்தை அவன் தாங்கியதே காரணம் என்று விளக்கியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். நாராயண கவசத்தை விச்சுவரூபன் இந்

திரனுக்கு உபதேசித்ததாகப் பின்வருமாறு கூறுகிறார் ஆசிரியர்.

அரும்புனல் படிந்து
புனிதமுற்று அங்க
நியாசமாங்கு அடைவுடன்
இயற்றித்
திருந்திய மறைசொல்
கரநியா சமுந்தான்
செய்ம்முறை திருத்தகப்
புரிந்து
வரந்தரு மாயன் மலர்ப்பதத்
துணையை
மனத்திடை மருவுறக் கருதிப்
புரந்தரன் தனக்கு விச்சுவ
ரூபன்
புகலுமால் கவயத்தைப்
புகல்வாம்.

[புனிதமுற்று பரிசுத்தமடைந்து, அங்கநியாசம்-இருதயம் முதலானவற்றைத் தொடுதல், கரநியாசம்-விரல்களால் கைகளைத் தொடுதல், திருத்தக- செவ்வையாக, மாயன் திருமாலது, புரந்தரன் இந்திரன், மால்கவயத்தை- நாராயண கவயத்தை, புகல்வாம் என்றது சுகன்.]

மலர்ந்தசெங் கமல மலர்மகள்
மறுவார்-
மார்வமும் வாளிகே டகம்வாள்
இலங்கெழில் ஆழி
வளைகதை பாசம்
இருஞ்சிலை தரித்தவெண்
கரமும்
நலந்தரு கலுழன்
புயத்தினி துறைந்த
நளினமென் பாதமு மாக
வலந்தர முன்வந்
தெங்கும்எப் பொழுதும்
மாயவன் கருணையிற் காக்க.

மலர்மகள் திருமகள், மறு-ஸ்ரீவத்ஸமென்னும் மச்சம், மார்வம்- மார்பு, வாளி-அம்பு, ஆழி-சக்கரம், வளை-சங்கு, சிலை-வில், கலுழன்-கருடனது, நளினம்-தாமரை, மாயவன் திருமால், காக்க-காப்பானாக.

மலர்ந்த செங்கமலத்தில் வீற்றிருக்கும் திருமகளும் ஸ்ரீவத்ஸமென்னும் மச்சமும் பொருந்திய மார்புடன் அம்பு, வில், சக்கரம், கேடகம், வாள், கதை, ஆகிய ஆயுதங்களைத் தரித்த திருக்கரங்களுடன், தாமரை மலர் போன்ற திருப்பாதங்களுடன், கருடன் மீது அமர்ந்தருளும் திருமால் வலந்தர முன்வந்து எங்கும் எப்பொழுதும் காப்பானாக.

புகழ்பெரு மீனுரு எடுத்த
புங்கவன்
அகமகிழ் தந்துநீ ரடைந்து
காக்க;இச்
சகமிசை வாமனன் சார்ந்து
காக்க; ஏர்
மிகுநிலம் அளந்தமால்
விசும்பிற்காக்கவே.

மீனுரு-மச்சாவதாரம், புங்கவன்-திருமால், சகமிசை பூமியில், வாமனன்-வாமனாவதாரம், ஏர் மிகு நிலத்தை அளந்த மால், ஏர்-அழகு, விசும்பில்-ஆகாயத்தில்.

## சந்தாதாரர்களுக்கு...

30-9-91-ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும், விவரங்களுக்கும் ஆசிரியர் ஸப்தகிரி, தி.தி. தேவஸ்தானம், திருப்பதி எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

45, 85, 807, 819, 1852, 1949, 1950, 1955, 1986, 2523, 3133, 3181, 3190, 3226, 3245, 3285, 3300, 3321, 3326, 3336, 3341, 3343, 3344, 3346, 3348, 3349, 3350 முதல் 3352, 3377, 3388, 3469, 3911, 4148, 4179, 4267, 4342, 4361, 4448, 4482, 4598, 5685, 5704, 6017, 6021, 6026, 6028, 6032, 6035, 6037 முதல் 6041, 6044, 6045, 6047, 6055, 6057, 6059, 6060, 6061, 6063, 6044, 6065, 6066, 6067, 8067, 8068, 8069, 8070 முதல் 8077, 8079 முதல் 8084, 8086 முதல் 8093, 8095, 8096, 8097, 8099, 8101, 8102 முதல் 8109, 8111 முதல் 8145, 8147, 8148 முதல் 8153, 8155 முதல் 8171, 8173 முதல் 8183, 8185 முதல் 8188, 8190 முதல் 8270, 8271 முதல் 8273, 8276, 8277 முதல் 8283, 8285, 8286 முதல் 8318, 8320, 8321, 8323 முதல் 8330, 8332 முதல் 8361, 8363, 8364, 8365, 8368 முதல் 8395, 8397 முதல் 8438, 8440 முதல் 8504, 8506 முதல் 8520, 8522 முதல் 8536, 8536, 8538, 8539 முதல் 8549, 8551 முதல் 8565, 8567 முதல் 8573, 8577 முதல் 8580, 8649 முதல் 8655, 8670, 8693, 8815, 9396.

மச்சாவதாரமும் வாமனாவதாரமும் எடுத்த திருமாலே நீரிலும் நிலத்திலும் ஆகாயத்திலும் காப்பானாக.

பன்னிய வரைமுதற்
பலவ ரண்களில்
துன்னுவெஞ் சமத்திடைத்
தோன்ற லுற்றுமுன்
மன்னுவெங் கனகனை மாய்த்த
மைந்துடை
நன்னலஞ் சேர்நர மடங்கல்
காக்கவே.

வரை-மலை, சமத்திடை-யுத்தத்தில், கனகனை-இரணியனை, மைந்துடை-வன்மையையுடைய, நரமடங்கல்-நரசிங்கமாகிய திருமால்.

நெருங்கிய மலை முதலாகப் பல அரண்களிலும் யுத்தத்திலும் வன்மையுடைய இரணியனை வதைத்தருளிய பேராற்றல் நலம் மிக்க நரசிங்கமூர்த்தி காப்பானாக.

வெற்றியாண் கேழலாய்
விளங்கு மேலவன்
பெற்றிடு வழிதொறும்
பெரிது காக்கவே;
நற்றவ நரன்சொல்நா
ராய ணன்நணி
உற்றவர் பற்றெலாம்
ஒழித்துக் காக்கவே.

கேழலாய் வராகமாய், மேலவன்-திருமால், வழிதொறும்-செல்லும் வழிகளெல்லாம், நணி-நண்ணி.

வெற்றிமிக்க வராக அவதாரமெடுத்த திருமால் செல்லும் வழிகளிலெல்லாம் காப்பானாக. மேன்மை மிக்க தவமுடையோர் ஓயாது நினைந்தொழுகும் நாராயணனாவன் இவ்வுலகில் பற்றுடன் கூடியவர்கள் அருகே வந்திருந்து அவர்களுடைய பறறுகளையெல்லாம் ஒழித்து நிலையான வீடு பேறு அருளிக் காப்பானாக.

தசரதன் மதலையாம்
இராமன் தன்துணை
இசைதரும் இளவலோ டினிதி
யைந்திருந்
திசைதொறுந் திசைதொறுஞ்
செப்பும் காலெலாம்
விசயம்வந் துறநனி
விரைந்து காக்கவே

மதலை-புதல்வன், இளவல்-இலக்குமணன், இருந்திசை தொறும்- பெரிய திசைகளில், செப்புங்காலெலாம்-சொல்லும் பொழுதெல்லாம். விசயம்-வெற்றி.

தசரத மகாராஜாவின் திருக்குமாரனென இராமனாக அவதரித்த திருமால் தம் இளவல் இலக்குமணனோடு, பெரிய திசைகளெங்கிலும் செல்லும் பொழுதெல்லாம் வெற்றி ஏற்படும் படியாக இணைந்து வந்து காப்பானாக.

கழைதிகழ் கார்வரைக்
கவினுஞ் சாரலின்
மழைதவழ் குவட்டின்மீது
மருவு போழ்தெலாம்
பழமறை மொழிதரு
பரசு ராமனுள்
விழைவொடு குறைவற
விரைந்து காக்கவே.

கழை மூங்கில், கார்-கருமை, வரை-மலையினிடத்தே, மழை-மேகம், குவடு-சிகரம், மறை-வேதம், விழைவொடு- விருப்பத்தோடு.

மூங்கிற்காடுகள் நிறைந்த கருமையான மலையினிடத்தே சிகரங்கள் தோறும் மேகங்கள் சூழும்பொழுதெல்லாம், பழமையான வேதத்தை அருளும் பரசுராமனாய் அவதரித்த திருமால் உள்ளன்போடு விரைந்து வந்து காப்பானாக.

சிந்தையுள் மகிழ்தத்தாத்
திரையர் தீங்கற
மந்திர நவில்வுழி வந்து
காக்கவே;
பந்தமில் இடபனாம்
பைந்து ழாய்முகில்
சந்ததங் குளிரில்தா
பத்தில் காக்கவே

தீங்கர-குற்றங்கெட, இடபனாம்முகில்-திருமால், சந்ததம்-எப்பொழுதும்.

நாராயணுய என்னும் மந்திரத்தைச் சொல்லும் பொழுதெல்



ஸ்ரீ ஆதிகேசவர் திருக்கோயில்
திருவட்டாறு.

லாம் சிந்தை மகிழ்ந்து, குற்றங்களை நீக்கியருளும் தத்தாத்திரையனாகிய திருமால் காப்பானாக. துளப மாலையை மார்பில் தாங்கி மேகம் போல் கறுத்து நிற்கும் திருமாலானவன் குளிர் காலத்திலும் தாப காலத்திலும் எப்பொழுதும் காப்பானாக.

கருதருஞ் சீர்திகழ் கபிலன்
அன்பொடும்
இருவினைக் கட்டறுத் தினிது
காக்கவே
தரைபுகழ் மறைதெரி சனற்கு
மாரன்தான்
பொருமதன் தருதுயர்
போக்கிக் காக்கவே.

கருதரும்-எண்ணுதற்கு அரிதான, கபிலன் திருமால், இருவினை- நல்வினை, தீவினை, தரை-பூமி, மறைதெரி-வேதத்தை ஆராய்ந்த, பொருமதன்-போர் செய்யும் மன்மதன், துயர் துன்பம்.

மனமொழி மெய்களால் அறிதற்கும் அரிதான திருமாலவன் நல்வினை, தீவினை என்னும் இருவினையின் கட்டறுத்து இனிதே காப்பானாக. இப்பூமியில் தோன்றி வேதத்தை ஆராய்ந்த சனற்குமாரனாகிய திருமாலானவன் மன்மதன் தரும் துன்பங்களையெல்லாம் போக்கிக் காப்பானாக.

வெறுப்பொடு பகைக்குழு
மிடையும் வெங்கொலை
மறத்தினிற் பொலிதரு
வழிகள் தோறும்வந்து
அறத்தினை நிறுவிய
அயக்கி ரீவனாம்
மறைப்பொரு ளாயவன்
வந்து காக்கவே.

பகைக்குழு மிடையும் வழிகள்; வெங்கொலை பொலிதரும் வழிகள். மிடைதல்-நெருங்கல், மறத்தினில்-வீரத்தினால், அயக்கிரீவன்- திருமால், மறை-வேதம்.

வெறுப்புடன் பகைக்குழு நெருங்கியவிடத்தும் வீரத்தினால் வெங்கொலை நிகழ்த்தவிடத்தும் அறத்தையே நிலைநாட்டிய அயக்கிரீவனாகிய திருமால், வேதத்தின் விழுப்பொருளெனவே வந்து காப்பானாக.

காரதிர் கடலெனக் கவின்செய்
வண்ணனைப்
பாரத சமர்த்தலைப்
பரவ வென்றிசெய்
சாரதி தனைத்தொழுஞ்
சமயத் தின்னருள்
நாரத முனிவரன்
நயந்து காக்கவே.

காரதிர் கடல்-கார் போல் அதிரும் கடல், கவின்-அழகு, வண்ணனை-திருமாலை, பாரத சமர்த்தலை-பாரதப் போரில், பரவ-அருச்சுனன் துதிக்க, சாரதி தனை- தேரோட்டிய திருமாலை, நயந்து-விரும்பி.

கார்வண்ணனும், பாரதப்போரில் அருச்சுனனுக்குத் தேரோட்டியாக அமர்ந்தவனும் ஆகிய திருமால் வேண்டும் பொழுதெல்லாம் விரும்பி வந்து காப்பானாக. (நாரதன் திருமாலினது கூறுதலால் இவ்விதம் கூறினார்.)

கொழுந்துள வணிந்தபைங்
கூர்ம மாயமால்
அழுந்தவெந் நரகுருது
அருளிற் காக்கவே;
வழங்குதன் வந்திரி யாய
மாயவன்
விழைந்தனன் ஆதியில்
விரைந்து காக்கவே

கூர்மம்-ஆமை, வெந்தரகு அழுந்த உருது அருளின் காக்க, அருளின்-அருளால், மாயவன் திருமால்.

கொழுந்துளப மாலையணிந்தவனும் கூர்ம அவதாரமெடுத்தவனுமாகிய திருமாலானவன், கொடுமையான நரகுலகில் அழுந்தாதவாறு அருளுடன் காப்பானாக. வைத்தியர்களுக்கெல்லாம் தலையாய வைத்தியனாகத் திகழும் தன்வந்திரி எனப் புகழ்பெறும் திருமாலானவன் பிறவி நோயைப் போக்கியருள விரைந்து வந்து காப்பானாக.

போற்றுசீர் வேள்வியம்
புருடன் போந்தெனைக்
கூற்றடா தன்புளங்
கொண்டு காக்கவே;
ஏற்றநற் பலமுனம் ஏயும்
ராமன்வெஞ்
சீற்றம்வந் துழிநனி
சிறந்து காக்கவே

வேள்வியம் புருடன்-யாக புருஷன், போந்து-வந்து, கூற்று-இயமன், அடாது-வருந்தாதபடி, பலம்முனம் ஏயும் ராமன்-பலராமன், சீற்றம்- கோபம்.

போற்றுதலுக்குரிய யாகபதியாகிய திருமாலவன் இயமனாகிய கூற்றுவன் வந்து வருத்தாதபடி காப்பானாக. கொடுமையான கோபம் வந்தவிடத்து, பலராமனாக வந்த திருமால் சிறப்புடன் காப்பானாக.

விடலரு நான்மறை
வியாதன் என்பவன்

ஒடிவறு விஞ்சைமிக்
குதவிக் காக்கவே
படிமிசை அறந்தரப்
பௌத்த னாகுமால்
கொடியவர் மதங்குறு
காது காக்கவே

வியாதன்-வியாசன், வேத வியாசன். ஒடிவுஅறு-த விர்த்தலில்லாத, விஞ்சை-மந்தி ரங்களை, படிமிசை-பூமியில், அறம்-தயாதருமத்தை, பௌத் தன் ஆகும் மால்.

அருமையான நான்மறைக ளுக்கு அதிபதியாகிய வேத வியாசனானவன் தவிர்தலில் லாத மந்திரங்களை மிகுதியாக நல்கிக் காப்பானாக. பூமியில் அறத்தை நிலை நாட்டி, கொடி யவர் செருக்கு அழியும்படியாகக் காப்பானாக.

பரியுரு எடுத்தறம்
பரிக்கும் பச்சைமால்
உரைகலித் தீமைவந்
துறுது காக்கவே;
வருபகல் அறுவகை யாக்கி
முந்துகூறு
அருளொடு கேசவன்
அடைந்து காக்கவே.

பரி-குதிரை, அறத்தைப் பரிக் கும். பரிக்கும்-தாங்கும், கலித் தீமை-' கலிபுருடனது தீமை, பகலை ஆறு கூறுக்கி; கூறு- பகுதி, முந்துகூறு-முதற் பகுதி யில், கேசவன்-திருமால்.

கல்கி அவதாரமெடுத்த திரு மால் இந்தக் கலிபுருடனது தீமைகளை அண்டவிடாது காப்பானாக. பகலை ஆறு கூறுக்கி அதில் முதற்கூறில் கேசவன் காப்பானாக.

வலஞ்செய இரண்டென
வகுத்த கூற்றில்ஆன்
குலம்புரந் தளித்தகோ
விந்தன் காக்கவே;
பலந்தர மூன்றெனப்
பகுத்த கூற்றினில்
நலசெய்நா ராயணன் நயந்து
காக்கவே.

இரண்டென வகுத்த கூற்றின் பகலின் இரண்டாவது பகுதி யில், ஆண்குலம்-பசுவின் கூட் டம், புரந்து - பாதுகாத்து.

பசுக்கூட்டத்தைப் பரிவுடன் காத்த கோவிந்தன் பகலின் இரண்டாவது பகுதியில் காப் பானாக அடுத்து வரும் மூன் றுவது பகுதியில் நலமே தரும் நாராயணன் விரும்பி வந்து காப்பானாக.

பொருவிலா நான்கெனப்
புகன்ற கூற்றினில்
பருதிநேர் சக்கர
பாணி காக்கவே;
அரியசீ ரைந்தென அறைந்த
கூற்றினில்
வருமது சூதனன் மகிழ்ந்து
காக்கவே

பொரு-ஒப்பு, பருதிநேர்-சூரி யனை ஒத்த, சக்கரபாணி திரு மால்.

சக்கராயுதத்தைக் கையிலேந் திய சக்கரபாணி நான்காவது கூற்றினில் காப்பானாக. அடுத் துவரும் ஐந்தாவது பகுதி யில் மதுசூதனாகிய திருமால் மகிழ்ந்து காப்பானாக.

புரைதப ஆறெனப் புகன்ற
கூற்றினில்
உரைதரு மாதவன் உவந்து
காக்கவே;
இரசனி முகத்தினில் இந்திரி
யங்களுக்கு
அரசனென் றுரைக்குமால்
அடைந்து காக்கவே.

புரைதப-குற்றம்கெட, உரை- வேதமொழி, மாதவன்-திருமால், இரசனி முகத்தினில்-இரவின் தொடக்கத்தில்; பிரதோஷம் என் பர். இந்திரியங்களுக்கு அர சன் ஹ்ருஷிகேசன், திருமால், ஹ்ருஷீகம்- இந்திரியம்.

வேதமொழியே பகரும் மாதவ னாகிய திருமால் பகலது ஆறு



**ஸ்ரீவேங்கடேஸ்வரர் திருக்கோயில்**
**தெங்கனிக்கோட்டா - கர்நாடக மாநிலம்.**

வது பகுதியிலும் காப்பானாக. பிரதோஷம் எனப்படும் இரவின் தொடக்கக்காலத்தில், ஹ்ருஷிகேசனாகிய திருமால் உடனிருந்து காப்பானாக.

பன்னுமுச் சகந்தரு பற்ப
நாபியான்
துன்னிய நிசிநடுச் சூழ்ந்து
காக்கவே;
உன்னும் அபரமாம்
நிசியில் ஒண்புகழ்
மன்னிய திருமறு
மார்பன் காக்கவே.

முச்சகம்-மூவுலகங்கள், பற்பநாபியான்-பத்மநாபன், திருமால். துன்னிய-நிறைந்த, அபரமாம் நிசியில்-நள்ளிரவின் பிற்கூறில், திருமறு மார்பன்-ஸ்ரீவத்ஸன், திருமால்.

மூவுலக உயிர்களையும் தன் உந்திக் கமலத்தால் தோன்றச் செய்தருளும் பத்மநாபன் நிறைந்த நடுநிசியில் சூழ்ந்திருந்து காப்பானாக. நள்ளிரவின் பிற்கூறில் ஸ்ரீவத்ஸனாகிய திருமால் காப்பானாக.

களிகொள்சீர் வைகறைக்
கலந்து வண்புகழ்
வளர்சநார்த் தனனுளம்
மகிழ்ந்து காக்கவே;
விளையுநற் சந்திகள் தோறு
மிக்குவந்து
அளிசெய்தா மோதரன்
அடைந்து காக்கவே.

களிகொள்-மகிழ்ச்சி தரும், வைகறை-விடியற்காலம், சந்தி-காலை, அளி-அன்பு.

உயிரினங்கள் எல்லாம் மகிழ்ச்சி கொண்டு எழுந்திருக்கும் விடியற்காலைப் பொழுதினில் சநார்த்தனன் ஆகிய திருமால் மகிழ்வுடன் காப்பானாக. இவ்வாறு பொழுது புலர்ந்து மலரும் காலையம் பொழுதெல்லாம், வேண்டுவார்க்கு வேண்டிய வண்ணம் உவந்து வந்து அன்பு செய்யும் தாமோதரன் உடனிருந்து காப்பானாக.

இதுவரை, பகல், இரவு நேரங்களில் பகுதிகளில் காப்பாற்றுக எனத் திருமாலின் திருநாமங்களைச் சொல்லித் துதித்ததன் பின்னர் மாலினது ஆயுதங்கள் கூறப்பெறும்.

கற்றையங் கதிரழற் கடவுள்
காட்டகம்
முற்றுவெவ் அரில்களை
முருக்கு மாறுபோல்
அற்றமில் அயிற்படை
அரசென் ஆழிதான்
உற்றபல் பகைதுமித்
துவந்து காக்கவே.

கதிரழற் கடவுள்-அக்கினி, அரில்-சிறுதூறு, முருக்குமாறு போல்- கொளுத்துவது போல் அயில் அழி, படை அரசென் ஆழி; அயில் கூர்மை; படை அரசு என்-மற்ற ஆயுதங்களுக்கு அரசு எனத்தக்க; ஆழி-சக்கராயுதம் பகைகளைத் துமித்து; துமித்து-நாசம் செய்து.

காட்டகத்திலுள்ள சிறு தூறுகளை அக்கினி பகவன் கொளுத்தி அழிப்பது போலே, மற்ற ஆயுதங்களுக்கெல்லாம் அரசு போல் விளங்கும் திருமாலின் சக்கராயுதமானது பகைவர்களை நாசம் செய்து அழித்துக் காப்பாற்றுமாக.

ஆடக மணித்தொடி அமலன்
அங்கைசேர்
கேடகஞ் சமர்க்கெதிர்
கெழுமி னோர்விழி
மாடகம் மறைப்பமாற்
றலரை மாய்ந்திருங்.
கூடகத் துறைந்தகூர்
வாளுங் காக்கவே

ஆடகம்-பொன், தொடியை யுடைய அமலன்; திருமால், சமர்க்கு-போருக்கு, எதிர்கெழுமினோர்-பகைவர்களது, விழியின் மாடகத்தை மறைப்ப; மாடகம்-புறவிடம், கூடு அகத்து-உறையினுள், உறைந்த-தங்கிய.

போரிட வரும் பகைவர்களது விழியின் புறவிடத்தை மறைக்கும் படியான ஒளி வீசும் தன் மையுடன், திருமாலின் அணிகலனாக, உறையினில் தங்கி இருக்கும் கூர்மையான வாளானது காப்பாற்றுமாக.

கொடியன பூதம்வெங் கூளி
யேமுதல்
இடிநிகர் தெவ்வினை
இரிய நூறிநுண்
பொடியெனப் பிதிர்த்துநம்
புனிதன் பூங்கை சேர்
தடியொரு குறைவறச் சார்ந்து
காக்கவே.

தெவ்வினை-பகைகளை, நூறி-நாசம் செய்து, புனிதன்-திருமாலது, பூங்கை-அழகிய கை, தடி-கதை.

புனிதனாகிய திருமாலது அழகிய கையில் விளங்கும் கதையாகிய படைக்கலன் பகைகளை நாசம் செய்து, நுண் பொடியாக்கிப் பிதிர்த்து அழித்துக் குறைவறக் காபபாற்றுமாக.

சூதுசெய் பகைக்குழு துனுக்க
மெய்தியிப்

பூதலத் திரிதர
வெருட்டிப் பூவுறை
மாதுளம் விரும்புகார்
வண்ணன் வாயில்வைத்
தூதுவெண் சங்கமுள் ளுவந்து
காக்கவே.

சூது-வஞ்சகம், துணுக்கம்-நடுக்கம், பூதலம்-பூமியில், இரிதர கெட்டுஓட, வெருட்டி-அச்சுறுத்தி, பூவுறை மாது-திருமகள், கார்வண்ணன்-திருமால்.

செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகள் உளம் நிறைந்த கார்வண்ணனாகிய திருமால் தன் வாயில்வைத்து ஊதும் வெண் சங்கானது, வஞ்சகமே செய்யும் பகைவர்கள் பூமியில் நடுக்க முற்று, கெட்டு ஓடும்படியாக அச்சுறுத்தி அழித்து, உள்ளன்போடு உவந்து காப்பாற்றுவோமாக.

பங்கயச் செங்க ணுனைப்
பரிக்கும்வெம் பறவை வேந்து
பொங்குமின் னருளின் வந்தெப்
பொழுதினும் உவந்து காக்க;
தங்ககம் புறம்பு திக்குச்
சாற்றிய விதிக்கு மேல்கீழ்
எங்கும்எப் பொழுதும் வந்துற்று
எறும்நர மடங்கல்காக்க.

செங்கணுனை - திருமாலை, பரிக்கும்-தாங்கும், பறவை வேந்து-கருடன், அகம்-உள், புறம்பு-வெளி, திக்கு-பெருந்திசை, விதிக்கு-கோணத்திசை, எறும்-வலிமை, நரமடங்கல்-நரசிங்க மூர்த்தியாகிய திருமால்.

மலர்ந்த தாமரை போன்ற கண்களையுடைய திருமாலைத் தம் தோள் மீது தாங்கும் கருடனானவன் இன்னருளோடு எப்பொழுதும் வந்து உவந்து காப்பானாக. உள்ளும் வெளியிலும், பெருந்திசையெங்கும், எங்கும் எப்பொழுதும், வலிமை மிக்க நரசிங்க மூர்த்தியாகிய திருமாலே காப்பானாக.



புஷ்கரணி - ஜெகந்நாதகுட்டா, ஆ.பி.

மாயவன் நாம ரூபம்
வாகனம் வாளி யாதி
ஆய ஐம் படைகள் சேனைக்
கணிதிகழ் தலைவ னென்னும்
தூயவன் பிராணன் புந்தி
சொல்மனம் ஆக்கை யோடு
மேய இந் தியங்கள் தம்மை
விருப்பொடும் மிடைந்து காக்க

மாயவன்-திருமால், நாமரூபம்-பெயரது உருவம், வாகனம்-கருடன், வாளியாதி ஐம்படை-அம்பு முதலிய ஐந்து ஆயுதங்கள், சேனைக்குத் தலைவனென்னும் தூயவன்; விஷ்வக்சேனர், புந்தி-புத்தி, இந்தியங்கள்-இந்திரியங்கள்.

திருமாலினுடைய நாமரூபம், வாகனமாகிய கருடன், கையிலேந்திய பஞ்சாயுதங்கள் போன்றவையாவும், பிராணன், புத்தி, சொல், மனம், உடம்பு, இந்திரியங்கள் அனைத்தையும் மிக்க விருப்புடன் நெருங்கியிருந்து காப்பாற்றுமாக

இவவாறு திருமாலின் உருவமாகவே விளங்கும் இந்த நாராயண கவசத்தை விருப்பத்தோடு தாங்குவாயேயானால் பகைவர் அனைவரையும் ஒரு சேர வெல்வது உறுதி என விச்சுவரூபன் அமரர் வேந்தனாகிய இந்திரனுக்கு உவந்து உரைக்கின்றான். (பா. 27-29) இந்திரனும் இக்கவசத்தால் வெற்றி பெறுகின்றான்.

இணையிலிக் கவயந் தாங்கும்
இருந்தவன் யாக்கை என்பை
அணிதிகழ் வானின் மேலும்
கடப்பரி தாய தென்னின்
மணிநிற வண்ணத் தம்மான்
வடிவமாங் கவயம் பெற்றோர்
தனிவறு பெருமை எம்மாற்
சாற்றுதற் கெளிதோன் - றன்றால்.

இணையில் ஒப்பு இல்லாத, இக்கவயம்-இந்நாராயண கவசத்தை, இருந்தவன்-கவுசிகனது, கடப்பரிது-கடந்து செல்வதற்கு முடியாதது, மணி-நீலமணி.

கவசங்களில் ஈடு இணையில்லாதது இந்த நாராயண கவசம். இக்கவசத்தைப் பெற்றோர் பெறும் பெருமைகளை எம்மால் சொல்வது அவ்வளவு எளிதான காரியமல்ல என்பது ஆசிரியர் வாக்கு.

இனையநற் கவயம் கேட்போர்
இயம்புவோர் யாவ ரேனும்
வினைசெய்வெம் பிணியி னொன்றூர்
வேண்டிய பெறுப வென்றும்
குனிதிரைக் கடல்சூழ் பார்மேல்
கொடும்பகை யிலராய்க் கங்கைப்
புனல்வழி பொலங்க ழற்தாட்
புனிதனைப் பொருந்து வாரால்.

ஒன்றூர்-பொருந்தார், வேண்டிய பெறுப-விரும்பியவற்றைப் பெறுவர், தாள்-பாதம்.

நலம்தரும் இந்த நாராயண கவசத்தைப் பாடிப் போற்றுவோர் அனைவரும் தீவினையிலிருந்தும் பிறவிப்பிணியிலிருந்தும் விடுதலை அடைவர். அவர்கள் வேண்டிய எல்லாம் பெறுவர்; கங்கைப் புனல் வழிகின்ற அழகிய கழலையணிந்த தாள்களையுடைய புனிதனாகிய திருமாலின் திருவருளை உறுதியாகப் பெறுவர்

நாவால் நவின்று வணங்குவோருக்கு நாளும் நலம்தரும் இந்த நாராயண கவசத்தை நாமும் பாராயணம் செய்து நன்மைகள் பல அடைவோமாக.

●●●

### தோற்றுவாய்:

'பக்தி இயக்கம்' தமிழகத்தில் முதலில் தோன்றிப் பின்னர் வடவேங்கடத்தைக் கடந்து, வட இந்தியாவில் பல்வேறு பகுதிகளில் சென்று பரவியது. இதனை,

"பக்திநெறி தமிழகத்தில் தோன்றியது;
மராட்டியத்தில் வளர்ந்தது;
குஜராத்தில் மலர்ந்தது;
இராசபுதனத்தில் இருளகற்றியது;
வங்காளத்தில் வான்புகழ் பெற்றது."

என வடமொழியிலுள்ள பௌஷிய புராணம் கூறுவதால் அறியலாம்.

இந்நெறியை 'மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்களும், நாயன்மார்களும் பரப்பினர். ஆழ்வார்கள் பதின்மருள் முதலாழ்வர் மூவரும், திருமழிசையாழ்வாரும் தொண்டை நாட்டில் அவதரித்தனர். ஆழ்வார்களுக்குப் பின்னர் ஆசாரியர்கள் தோன்றினர். இவ்வகையில் நாதமுனிகள் என்பவர் முதலில் தோன்றியவராவர். அவருக்குப் பின் சிறந்து விளங்கியவர் ஆளவந்தார். பெரியநம்பி, இராமானுஜர் ஆகியோராவார் உடையவருக்குப் பின் ஆசாரியரின் நெறி வடகலைவழி, தென்கலைவழி என இருவகையாக அமைந்தது. இவ்வழியில் வந்தோரில் பலர் தொண்டை நன்னாட்டில் தோன்றி வைணவ சமய மறுமலர்ச்சிக்கு அடிப்படையாக விளங்கினர். அவர்களுடைய வைணவ சமயப் பணியினை மதிப்பிடுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.



# வைணவ சமய மறுமலர்ச்சி

புலவர் திரு. இரா.வ. கமலக்கண்ணன் - தேசூர்.

### திருக்கச்சி நம்பி

ஸ்ரீபெரும்புதூரை அடுத்த பூவிருநதவல்லியில் பிறந்தனர் காஞ்சி அருள்மிகு வரதராஜப் பெருமானுக்குத திருமாலைத் தொண்டும் திருஆலவட்டத்தொண்டும் (விசிறி) செய்தவர். உடையவருக்கு வழிகாட்டியாகத் திகழ்ந்தவர். பெருமாளிடம் உடையவரின் ஐயங்களைக் கேட்டு 'ஆறு வார்த்தைதகளாக'1. நாமே பரதத்துவம் (மும்மூர்த்திகளில் நானே முதல்வன்) 2. நம் சமயம் பேதமுடையதே (சித்து, அசித்து, ஈசுவரன் என்ற மூன்று பேதமுடையது) 3. உபாயம் சரணுகதியே. (என்னை அடைய சரணுகதியாகிய நானேதான் வழி) 4. இறுதிக்கால நினைவு தேவையில்லை. (என்னைச் சரணடைந்தவனுக்கு இறக்கும் போது என்னைப் பற்றிய நினைவு தேவை

யில்லை.) 5. இத்தேக முடிவிலே மோட்சம். 6. பெரிய நம்பிகளை ஆச்ரயிக்க வேணும் (இராமானுஜர் பெரிய நம்பிகளிடம் பஞ்சசம்ஸ்காராதிகளைப் பெற வேண்டும்.) விடை அறிந்து வந்து கூறியவர். பெரிய நம்பிகளை ஆசாரியராகக் கொள்ள உடையவரை ஆற்றுப் படுத்தியவர். 'தேவராஜாஷ்டகம்' பாடியவர், ஆளவந்தாரின் சீடர்களில் ஒருவர். இவர் திருச்சந்த விருத்தத் தனியன்கள் இரண்டு பாடியுள்ளார்.

## திருமலைநம்பி

உடையவரின் தாய்மாமன்; ஆளவந்தாரின் சீடன். திருக்குருகைப் பிரான் பிள்ளானின் தந்தையார். இவரது மூத்த சகோதரி பூமிப் பிராட்டியின் மகனார் உடையவராவார். இளைய சகோதரி பெரியபிராட்டியின் மகனார் கோவிந்தன் (எம்பார்) ஆவார். இவர் இராமாநுஜருக்கு இராமாயணப் பாடம்



ஸ்ரீராமாநுஜர்

சொன்னார். திருமலையில் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்தவர். திருப்பாணுழ்வாரின் 'அமனாதிபிரான்' பிரபந்தத்துக்கு ஒரு தனியன் இவரால் பாடப்பெற்றுள்ளது.

## எம்பெருமானார்: (1017-1137)

இவரது அவதாரம் (சகம் 939 பிங்கள ஆண்டு சித்திரை மாதம் 12ம் நாள் பஞ்சமி திதி சுக்கில பட்சம் திருவாதிரை நட்சத்திரம் கூடிய நன்னாள்) [Swami Ramakrisnananda: Life of Sri Ramanuja, P.72.]

இவரது வைணவ சமயத் தொண்டுகள் அளவிடற்கரியன. இவர் ஆசாரியர்களுள் 'நடுநாயகமாக' விளங்கினார். சாதி வேறுபாடுகளைத் தம் செயல்களினால் களைந்தார். 'திருவெட்டெழுத்து' மந்திரத்தை அனைவருக்கும் உபதேசித்துத் தாம் நரகம் புகவும் தயாராக நின்றார். நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களுக்கு வேதங்களுக்குச் சமமான ஏற்றம் உண்டு என்று நிறுவினார். இவ்வகையில் திருவாய்மொழிக்கு முதன் முதலில் உரைதோன்ற திருக்குருகைப்பிரான் பிள்ளான் மூலம் அனுமதியளித்தார் வைணவருடைய தினசரி ஒழுக்கங்களையும் ஆலய வழிபாட்டு முறைகளையும் ஒழுங்குபடுத்தினார். திருவரங்கம் முதல் எல்லாத் திருமால் ஆலயங்களிலும் இன்னின்ன காலங்களில் இன்னின்ன பாசுரங்களைச் சேவிக்க வேண்டும் என்று நியமித்தார். இதனால் ஆழ்வார் தம் செந்தமிழ்ப் பாசுரங்கள் வைணவர் தம் குடும்ப வாழ்விலும் புகுந்து அனுபவிக்கத்தக்க பொருளாகிவிட்டன இச்சிறப்பு சொல்லப்போனால், உலக வரலாற்றிலேயே வேறெந்தச் சமய இலக்கியத்துக்கும் இல்லாத ஒரு மேலான வாய்ப்பாகும். [மு. அருணசலம் தமிழ் இலக்கிய வரலாறு-கி.பி. 12ம் நூற்றுண்டு பகுதி 1, பக்கம் 18-19.] 74 சிம்மாசனாதிபதிகளை நியமித்து தென்னிந்தியா முழுமையும் வைணவ சமய மறுமலர்சிக்கு அடிகோலினார்.

பெரியகோயில் (திருவரங்கம்) நிருவாகத்தை இவர் வகுத்தமைத்தார். அவ்வாறே இன்றளவும் அங்கு நடந்து வருகிறது. அவ்வாறே திருமலையிலும் பல ஏற்பாடுகளைச் செய்தார். கீழ்த் திருப்பதியில் ஸ்ரீகோவிந்தராஜருக்குத் "திருக்கோயில் அமைத்தார் [டாக்டர். எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார், திருப்பதி, வரலாறு-பக்கம். 160] (சிதம்பரத்தில் கடலில் சோழமன்னரால் எறியப்பட்ட கோவிந்தராசர்) திருமலையிலுள்ள சுவாமி 'பெருமாளே' என நிறுவினார்.

வைணவ ஆகமங்கள் இருவகைப்படும் அவை வைகானசம், பஞ்சராத்திரம் என்பன. இவற்றுள் முதலாவது ஒரு குடும்பத்தினருக்கு, பிரிவினருக்கு மட்டுமே உரியதாக இருந்தது இது வேதநெறியை முற்றிலும் தழுவியது. பஞ்சராத்திர ஆகமம் கட்டுப்பாடு அதிகம் இல்லாதது, அனைத்துப் பிரிவு மக்களுக்கும் இது பொதுவானது. இதன் சிறப்பம்சம், "கடவுள் முன் எல்லாரும் ஓர்குலம்" என்ற கொள்கையை வேத வழியோடு இணைத்துக்காட்டு

வது. (டாக்டர் எச். டானியல் ஸ்மித்தின் ஆராய்ச்சிக்குறிப்புரைகளைக் கொண்டு, கே.கே.எ. வேங்கடாச்சாரி அவர்களால் தமிழில் எழுதப்பட்ட நூல் விளக்கம், அறிமுகம்-பக்கம்.18.) எனவே ஏற்கெனவே வைகானச ஆகம வழிபாட்டிலிருந்த பல ஆலயங்களை எம்பெருமானார் பாஞ்சராத்திர ஆகம வழிபாட்டிற்கு மாற்றினார். உடையவர் செய்த பல புரட்சிகளுள் இதுவும் ஒன்ருகும்.

மேலக்கோட்டை எனும் திருநாராயணபுரத்தில் ஹரிஜனங்கள் எனும் திருக்குலத்தாரும் பெருமானின் கருவறை வரை சென்று வழிபடும் உரிமையை வழங்கி சுமார 880 ஆண்டுகளுக்கு முன்னரே 'அரிஜன ஆலயப் பிரவேசம்' என்னும் சமுதாயப் புரட்சியைத் தொடங்கி வைத்தார்.

எல்லாவற்றுக்கும் மேலாக, சங்கரரின் மாயாவாதத்தை மறுத்து, பிரம்ம சூத்திரம், உபநிடதங்கள், மற்றும் பகவத் கீதைக்குத் தம் விசிட்டாத்வைதக் கொள்கையின் அடிப்படையில் விளக்கமளித்தார். இஃது 'இராமாநுச தரிசனம்' என்று வழங்கப்பெறும்.

ஆதிசங்கரரின் அத்வைதத்தில், 'ஆன்மாவே கடவுள். விசிட்டாத்வைதத்தில் ஆன்மாவுக்கு வேறுபட்டவராக (விலக்ஷணம்) உயர்ந்த பரம்பொருளே கடவுளாகும். காண்கின்ற அனைத்தும் அழிபவை, மாயை, பொய். காணுத அந்த ஒன்று மட்டும் மெய், சத்தியம்' என்பது அத்வைதம். ஆனால் இராமாநுசரின் விசிட்டாத்வைதமோ, 'இல்லாத பொருள் தோன்றுவதில்லை; தோன்றும் பொருள் இல்லாது போவதுமில்லை, அனைத்துப் பொருள்களும் உண்மையே; அவற்றின் மாற்றங்களும் சத்தியமே, அவற்றின் காரண காரியங்களும் நித்தியமே' என விளக்குகின்றது. 'உயிர் (சித்து) உடல் (அசித்து) இறைவன (ஈசுவரன்) ஆகிய மூன்றும் பிரிக்கமுடியாத தத்துவங்களாகும் என்பது இராமாநுச தத்துவத்தின் உயிரான கோட்பாடாகும். இம்மூன்று பொருள்களின் கூட்டமே உலகமாகும் என்பது இவர் தெளிவிக்கும் உண்மையாம்.

இவர்தம நெறியின் சிறப்பைப் போற்றும் திருவரங்கத்தமுதனார், 'நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன',(இராமாநுச நூற்றந்தாதி- பாசுரம். 54.)என்றும் - 'பார்த்தான் அறுசமயங்கள் பதைப்ப' (இராமாநுச நூற்றந்தாதி-பாசுரம் 52.) என்றும் போற்றுகின்ருர்.

இவர் தமது கொள்கைகளைப் பரப்பச் சீடர் குழாத்தை உருவாக்கினார். அவர்களில் 700 சந்நியாசிகளும், 12,000 ஏகாங்கிகளும், 300 பெண் அடியார்களும் (ஸ்ரீஆண்டாள் குழுவினர்) கணக்கற்ற பிராம்மணரல்லாத பாகவத உத்தமர்களும் இருந்தனர்.(Dr. N. Jagadeesan, History of Srivaishnavam in the Tamil Country (Post-Ramanuja) P-43.

## 74 சிம்மாசனாதிபதிகளில் தொண்டைநாட்டைச் சார்ந்தோர்:

1. சுந்தரத்தொளுடையான் திருமலை ஆண்டானின் திருக்குமாரர். 2. திருக்குருகைப்பிரான் பிள்ளான் - பெரிய திருமலைநம்பியின் திருக்குமாரர். 3. பராசரபட்டர் - கூரத்தாழ்வானின் திருக்குமாரர் 4. முதலியாண்டான் - உடையவரின் சகோதரியின் மகனார் பூவிருந்தவல்லியை அடுத்த பச்சைவாரணர் கோயிலில் பிறந்தவர். 5 உக்கல் ஆழ்வான் 6. எம்பார் (கோவிந்தர்) 7. கணியனூர் சிறியாச்சான். 8. திருமலைநல்லான். 9. உக்கல் அம்மாள். 10. ஆர்க்காட்டுப் பிள்ளான்.



வேதாந்த தேசிகர்

இவர் வடமொழியில் இயற்றிய நூல்கள்

1. வேதார்த்த சங்கிரகம்-விசிட்டாத்வைதக் கொள்கை விளக்கம்.
2. ஸ்ரீபாஷ்யம்-பிரம்மசூத்திர விளக்கம்.
3. கீதாபாஷ்யம் - பகவத்கீதை விளக்கம்.

4. வேதாந்த தீபா-பிரம்மசூத்திரச் சுருக்கம் விளக்கம்.

5. வேதாந்தசாரா-
தொடக்க நிலையினர்க்குரிய மேற்படி விளக்க நூல்.

6. சரணாகதி கத்யம்,

7. ஸ்ரீரங்க கத்யம் - சரணாகதியைப் பற்றிக் கூறுவன

8. ஸ்ரீவைகுண்ட கத்யம் - பரமபதம் பற்றிக்கூறுவது.

9. நித்யகிரந்தா-நாள் வழிபாட்டு முறைகளைக் கூறுவது.

இவர் பெரிய திருமொழிக்கு ஒரு தனியனும், பெருமாள் திருமொழிக்கு ஒரு தனியனும் திருமங்கை மன்னரின் திருவெழுக்கூற்றிருக்கை எனும் பிரபந்தத்துக்கு ஒரு தனியனும் பாடியுள்ளார். அவை வருமாறு

வாழிபரகாலன் வாழி கலிகன்றி
வாழிகுறையலூர் வாழ்வேந்தன்-
வாழியரோ
மாயோனை வாள்வலியால்
மந்திரங்கொள், மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்.

இன்னமுதம் ஊட்டுகேன்
இங்கேவா பைங்கிளியே
தென்னரங்கம் பாடவல்ல
சீர்ப்பெருமாள்-பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள்,
சேரலர்கோன் எங்கள்
குலசே கரனென்றே கூறு.

சீரார் திருவெழு கூற்றிருக்
கையென்னும் செந்தமிழால்
ஆரா வமுதன் குடந்தைப்
பிரான்றன் அடியிணைக் கீழ்
ஏரார் மறைப்பொருளெல்லா
மெடுத்திவ் வுலகுய்யவே
சோராமற் சொன்ன அருள்மாரி
பாதம் துணை நமக்கே

எம்பெருமானாரின் பெருமைகளை, தொண்டுகளை விளக்கிக் கூறப் பல நூல்கள் எழுதலாம். விரிவஞ்சி இத்துடன் முடிக்கின்றேன்.

எம்பார்: (1026-1131)

உடையவரின் சிறிய தாயாரின் மகனார் இடையில சைவராகிப் பின் வைணவரானார, ஸ்ரீபெரும்புதூரை அடுத்த மதுரமங்கலத்தில் தோன்றியவர் திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழிக்குத் தனியன் பாடியவர்.

'எங்கள் கதியே!
இராமானுசமுனியே!
சங்கைகெடுத் தாண்ட
தவராசா-பொங்குபுகழ்
மங்கையர்கோ னீந்த
மறையாயிரமனைத்தும்
தங்குமனம் நீயெனக்குத் தா'

'மாலைத் தனியே
வழிபறிக்க வேணுமென்று,
கோலிப் பதிவிருந்த
கொற்றவனே-வேலை
அணைத்தருளும் கையால்
அடியேன் வினையைத்
துணித்தருள வேணும்
துணிந்து'

உடையவருக்குப்பின்வைணவ சமயம் வடகலை வழி, தென் கலை வழி என இரு பிரிவாகப் பிரிந்தபோது, இவர் தென்கலை வழியினர்க்கு முதல்வரானார்

கூரத்தாழ்வான்:
(கி.பி. 1031-1136)

காஞ்சியை அடுத்த கூரம் எனும் ஊரில் தோன்றியவர். இராமானுசரின் முதன்மைச் சீடர், பிரம்மசூத்திரத்திற்கு (சுமார் கி.மு 400 இல் வாதராயணர் என்பவரால் செய்யப் பெற்றவை, பிரம்மத்தைப் பற்றிய விளக்கமாயிருத்தலின் இப்பெயர் பெற்றன. உபநிடதங்கள், பகவத்கீதை பிரம்மசூத்திரம் - ஆகிய மூன்றும் வேதாந்தத்தின் அடிநிலைகளாகும். இந் நூலில் 550 சூத்திரங்கள் உள்ளன. அவை பெரும்பாலும் 2 (அ) 3 சொற்களால்ஆகியவை. ஆதலால் அவை உரையின்றிப் பொருள் விளங்கா. ஆகவே சங்கரர், இராமானுசர் முதல் பல உரையாளர்கள் தோன்றினர். இதற்கு உரையெழுத உடையவர் கூரத்தாழ்வானை அழைத்துக்கொண்டு காஷ்மீர் சென்றுர், போதாயன விருத்தியை மேற்கோளாகக் கொண்டு, ஆழ்வான் துணையுடன் இதற்கு உரை வகுத்தார்.) (ஏ.வீ கோபாலாச்சாரியார், கலைக்களஞ்சியம், தொகுதி 7ம் பக்கம், 290, 291) உடையவர் உரைவகுக்கப் பெரிதும் துணையாக இருந்தவர் வைணவச் சமயத்திற்காகத் தம் திருக்கண்களை இழந்தவர். பெரிய திருமொழிக்கு இவரும் ஒரு தனியன் பாடியுள்ளார்.

நெஞ்சுக்கிருள்கடி தீபம்,
அடங்கா நெடும்பிறவி,
நஞ்சுக்கு நல்ல வமுதம்,
தமிழநன் னூல் துறைகள்,
அஞ்சுக் கிலக்கியம் ஆரண
சாரம் பரசமயப்
பஞ்சுக் கனலின் பொறிபர காலன்
பனுவல்களே.

இவர் வடமொழியில் ஐந்து நூல்கள் இயற்றியுள்ளார். (இவை பஞ்சஸ்தவம் எனப்படும் அவை ஸ்ரீவைகுண்டஸ்தவம், அதிமாநுஷ்தவம் சுந்தர பாகுஸ்தவம், வரதராஜஸ்தவம், ஸ்ரீஸ்தவம்-என்பனவாம்.) இவர் தம் சீடரான திருவரங்கத்தமுதனார் இராமாநுச நூற்றந்தந்தாதியைப் பாடினார். இவர்தம் மகனான பட்டர் (கி.பி. 1123) உடையவருக்குப் பின் மடத்துப் பொறுப்புகளை ஏற்றவர். விஷ்ணுசஹஸ்ரநாம பாஷ்யம் செய்தவர். வராக புராணத்திலுள்ள கைசிகபுராணம்-92 சுலோகங்களுக்குத் தமிழில் உரை எழுதியவர். திருமங்கை மன்னரின் 'திருநெடுந்தாண்டக' வியாக்கியானத்தில் வல்லவர். 'மைவண்ண நறுங்குஞ்சி' எனும் அதன் 21 ஆம் பாசுரத்திற்கு 800 கிரந்த அளவு உரை வகுத்தவர். இவர் பாடிய திருவாய்மொழித் தனியன்கள் இரண்டும் மிகவும் புகழ் பெற்றவையாம்.

"வான் திகழும் சோலை
மதிளரங்கர் வண்புகழ்மேல்
ஆன்ற-தமிழ்மறைகள்
ஆயிரமும் - ஈன்ற
முதல்தாய் சடகோபன்,
மொய்ம்பால் வளர்த்த
இதத்தா யிராமா னுசன்".

"மிக்க இறைநிலையும்
மெய்யாம் உயிர்நிலையும்
தக்க நெறியும் தடையாகித்
-தொக்கியலும்,
ஊழ்வினையும் வாழ்வினையும்
ஓதும் குருகையர்கோன்,
யாழிசை வேதத் தியல்".

ஆழ்வான் குருபரம்பரை பற்றியும்,



மணவாள மாமுனிகள்

லக்ஷ்மிநாத ஸ்மாரம்பாம் நாத
யாமுந மத்யமாம்
அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே
குருபரம்பராம்.

(இ.ள்.) "திருமகள் கேள்வன் முதலாக, நாதமுனிகளும் ஆளவந்தாரும் நடுவாக, என்னுடைய ஆசாரியன் இறுதியாக வருகின்ற குரு பரம்பரையை வணங்குகிறேன்" என்பதாம்.) எம்பெருமானார் பற்றியும் (யோ நித்யமச்யுத பதாம்புஜ-யுக்மருக்ம வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணய மேநே அஸமத்குரோர் பகவதோ'ஸ்ய தயைகஸிந்தோ: ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் பரபத்யே-ஸ்ரீவைகுண்டஸ்தவம்- ஆசாரிய வணக்கம். இ.ள்.) "எநத இரமாநுஜர் எப்பொழுதும் அழிவிலலாதவனான எம்பெருமானுடைய இருதிருவடித்தாமரைகளாகிற பொன்னிடத்தில் வைத்த ஆசையினால், அந்தப் பகவானுக்கு வேறான விஷயங்களைத் துரும்பாக நினைத்தாரோ அப்படிப்பட்ட என்னுடைய ஆசாரியரும் எல்லாக குணங்களும் நிறைந்தவரும் அருட்கடலானவருமான இநத இராமாநுசருடைய இருதிருவடிகளையும உபாயமாகப் பற்றுகிறேன்' - எனபதாம - பு.ரா. புருடோத்தமநாயுடு ஸ்ரீவசனபூஷண உரை தமிழாக்கம்) இயற்றிய தனியன் இரண்டும் இன்றும் வைணவர்களால் சேவிக்கப்பெறுகின்றது. ஆழ்வாரின் பெருமைகள் அளவிடற்கரியன. இவரது மற்றொரு மகனான சீராமப்பிள்ளை என்பவர் 'நான்முகன் திருவந்தாதி'க்குத் தனியன் பாடினார்.

**முதலியாண்டான்(எ)தாசரதி:**
**கி.பி. 1019-1124**

உடையவரின் சகோதரியின் மகன். உடையவரின் அன



கூரத்தாழ்வார்

புக்கு இலக்கானவர். பூவிருந்தவல்லியை அடுத்த பேட்டையில் பிறந்தவர். இவர் முதல் திருவந்தாதிக்கு ஒரு தனியன் பாடினார். இவர் மகன் கந்தாடையண்ணன் ஸ்ரீபெரும்புதூரில் உடையவருக்கு விக்கிரகம் அமைத்தார் (தமர உகந்த திருமேனி) உடையவர் திருவடி

முதலியாண்டான் - எனப்பெறும். (சடாரி என்றல் தவறு) முதலியாண்டான் குடும்பத்தினர் பெரிய கோயில் பொறுப்புகளைக் கவனித்து வந்தனர். முகம்மதியர் படையெடுப்புக்குப் பின் இது மாறியது.

**கிடம்பியாச்சான்:**
**(கி.பி. 1056-1158)**

காஞ்சியில்பிறந்தவர்;பெரிய திருமலைநம்பியின்
மருகர். திருக்கோட்டியூர் நம்பியின் நியமனப்படி உடையவருக்குத் தளிகை செய்தவர். நம்மாழ்வாரின் திருவிருத்தத்துக்கு ஒரு தனியன் பாடியுள்ளார்.

**திருக்குருகைப்பிரான் பிள்ளான்**
**கி.பி. 1068 (பிறப்பு)**

பெரியதிருமலை நம்பியின் புதல்வர். இவர் உடையவரால் ஞானபுத்திரராக ஏற்றுக்கொள்ளப்பட்டார் எம்பெருமானாரின் அனுமதி பெற்று இவர் திருவாய்மொழிக்கு 'ஆருயிரப்படி' - என்னும் மணிப்பிரவாள உரை வகுத்தார். (இதற்குப் பின்னர் இவ்வகையில் பன்னீராயிரப்படி, ஒன்பதாயிரப்படி, இருபத்து நான்காயிரப்படி, முப்பத்தாறாயிரப்படி - எனப் பல வியாக்கியானங்கள் தோன்ற இது அடிப்படையாயிற்று) இவர் வழியில் வடகலைப் பிரிவு வளரலாயிற்று. இவர் இரண்டாம் திருவந்தாதிக்கு ஒரு தனியன் இயற்றியுள்ளார் பிள்ளான் ரகசியம் எனும் வடமொழி நூலையும் இவர் இயற்றினார்.

**வடகலை குருபரம்பரை:**

இராமாநுசர (1017-1137)

திருக்குருகைப்பிரான் பிள்ளான் (பிறப்பு. கி.பி. 1068)

எங்கள் ஆழ்வான் (பிறப்பு கி.பி. 1108)

நடாதூர் அம்மாள் (பிறப்பு கி.பி. 1165)

ஆத்திரேய ராமானுஜர் (பிறப்பு கி.பி 1221)

வேதாந்த தேசிகர் (1268-1369)

நயினாராச்சான்பிள்ளை (பிறப்பு கி.பி 1316)

தேசிகர் - I. 1) பிரம்மதந்திரஸ்வதந்திரஜீயர் (மைசூர் பரகால மடத்தை கி.பி.1360-ல் தோற்றுவித்தவர்) 2) கடிகாசதம் அம்மாள் 3) ஆதிவண் சடகோப ஜீயர் (அகோபில மடத்தைக் கி.பி. 1398ல் நிறுவியவர்)

தேசிகர் II. 1) நைனார் ஆசாரியர் (தேசிகர் மகன்)

இவ்வடகலை வழியினர் பெரும்பாலும் தொண்டை நாட்டினரே. (எங்கள் ஆழ்வான் தவிர) தேசிகரிடம் சீடராயிருந்த பிரம்மதந்திரஸ்வதந்திரஜீயர் பரகால மடத்தை நிறுவி, கன்னட நாட்டில் வைணவம் வளரக் காரணரானார். அவர் தம் சீடரின் சீடராகிய ஆதிவண்சடகோபஜீயர் அகோபில மடத்தைத் தோற்றுவித்துப் பல கிளைகளுடன் இன்றும் இயங்கக் காரணரானார் அம்மடத்தின் 44ஆம் பட்டத்தில் இன்று எழுந்தருளியுள்ள ஸ்ரீவேதாந்த தேசிக யதீந்திர மகாதேசிகன் என்னும் சுவாமி, திருவரங்கத்தில் ஆசியாவிலேயே பெரிய இராஜ கோபுரத்தை எழுப்பி என்றும் அழியாப்புகழ் பெற்றுள்ளார் இவர் தொண்டை நாட்டைச் சார்ந்த செய்யாறு வட்டம் முக்கூர் என்னும் ஊரில் தோன்றியவராவார்.

**வேதாந்த தேசிகர்:**
**(கி.பி. 1268-1369)**

உடையவரின் மருமகனின் பெயராகிய நடாதூர் அம்மாள் வடகலைப் பிரிவினரின் மையமாகக் காஞ்சியை அமைத்தார். எனவே தென்கலை வளர, திருவரங்கம் மையமாயிற்று இவர் சீடரான சுதரிசனப்பட்டர் சுருதப்பிரகாசிகையை இயற்றினார. இந்நூல் உடையவரின் ஸ்ரீபாஷ்யத்திற்கு விளக்கமாக அமைந்தது. நடாதூர் அம்மாளுக்குப் பின் அவர்சீடர் ஆத்திரேய ராமாநுசர்(எ) அப்புள்ளார் ஆசாரியரானார் இவர் தேசிகரின் தாய்மாமாவும் குருவும் ஆவார். இவர் நியாயகுலிசம் என்னும் நூலை இயற்றினார்.

தேசிகர், அனந்தசூரி - தோதாரம்மா என்போருக்கு, திருமலைப்

பெருமானின் கண்டாமணியின் அமிசமாக அவதரித்தார். இவர் இளமையிலேயே எல்லா நூல்களையும் கற்று, பெரிய புலமையுடயவராக விளங்கினார். இவர் காலத்தில் திருவரங்கத்தில் பிள்ளை லோகாச்சாரியார் முதலிய தென்கலை ஆசாரியர் புகழுடன் விளங்கினார். அப்பொழுது ஓர் அத்வைதி அங்கு சமய விவாதத்துக்காக அங்கு வந்தார. அவருடன் வாதம் செய்யத் தக்கவரெனத் தேசிகரைத் திருவரங்கத்திலிருந்தோர் அழைத்தனர். தேசிகரும் அங்குச் சென்று அவருடன் வாதம் செய்து வென்றார். (Dr. N. Jagadeesam, History of Srivaishnavism, P.139.

மாலிக்காபூர் தென்னாட்டின் மீது படையெடுத்து வந்த போது (கி.பி.1310-1311) பிள்ளைலோகாச்சாரியார் திருவரங்கரின் உற்சவ விக்கிரகத்தைப் பாதுகாக்க உடன் சென்று வழியில் (காளையார்கோயில்) பரமபதித்தார். தேசிகரோ, சுதரிசனபட்டர் இறக்கும் தறுவாயில் தம்மிடம் ஒப்படைத்த சுருதப்பிரகாசிகைச் சுவடியுடன், அவர்தம் இருமக்களையும் அழைத்துக் கொண்டு, சத்தியமங்கலம் சென்றார். (Dr. N. Jagadeesan, History of Srivaishnavism, P.141) (மைசூர் மாநிலம்)

உற்சவர் அரங்கநாதரைப் பல இடங்களுக்கும் எடுத்துச் சென்று இறுதியில் திருமலையில் பாதுகாப்பாகக் கொண்டு சேர்த்தனர். பின்னர் கி.பி. 1360-61ல் செஞ்சியிலிருந்த விஜயநகர படைத்தலைவர் கோபனாவின் துணையுடன் ( திருமலையிலிருந்த அரங்கநாதர் செஞ்சியையடுத்த சிங்கபுரத்தில் (சிங்கவரம்) சிலகாலம் தங்கியிருந்தார்) திருவரங்கத்தில் மீண்டும் பழையபடி பிரதிட்டை செய்யத் தேசிகர் துணையாய் இருந்தார். இவ்வரலாற்றுச் செய்தி திருவரங்கம் கோயிலில் பொறிக்கப் பெற்றுள்ளது.. (இரண்டாம் பிராகாரம் கிழக்குச் சுவரில உள்ள கல்வெட்டு சகம். 1293-கி.பி. 1371-E.I., Vol.XIII, P.222

இவ்வாறு தொண்டைநாட்டுத் திருத்தலங்கள் அரங்கர் பாதுகாப்பாக வாழ உதவிப் பெருமைபெற்றன.

### தேசிகரின் நூல்கள்

இவர் வடமொழியிலும் தென்மொழியிலும் சுமார் 100 நூல்களுக்கு மேல் இயற்றியுள்ளார். அவற்றுள் இரகசியத்திரயம், அபயபிரதானசாரம், பரமபத சோபானம், பாஞ்சராத்திர ரட்சை, கோதாஸ்துதி, யதிராஜசப்ததி, சங்கல்ப சூரியோதயம், அம்ஸஸந்தேசம், கீதா பாஷ்ய சாரம், பாதுகாஸஹஸ்ரம், (ஒரே இரவில் பாடியது.) யாதவாயுபதம் ஆகியன புகழ் பெற்றன. இவர் தமிழில் இயற்றிய தேசிகப் பிரபந்தம் திவ்வியப் பிரபந்தத்துக்கு இணையாகப் போற்றப் பெறுவது.

தேசிகர் வடமொழி நூல்களை முற்றத்துறைபோகக் கற்றவர். அம்மொழியில் வேதபாகங்கள் சில நன்கு விளங்காமலிருந்தன. அந்நிலையில் தமிழ் வேதமாகிய திவ்வியப்பிரபந்தங்களைப் பொருளுடன் கற்ற



ஸ்ரீ ஆளவந்தார்

பின்னர், அதுவரை விளங்காமலிருந்த வேதபாக அர்த்தங்கள் விளங்கப்பெற்றன என்று பெருமையுடன் பாடுகிறார்.

"பொய்கைமுனி பூதத்தார்
பேயாழ் வார்தண்

பொருநல்வருங் குருகேசன்
விட்டு சித்தன்

துய்யகுல சேகரனம் பாண நாதன்

தொண்டரடிப் பொடிமழிசை
வந்த சோதி

வையமெலா மறைவிளங்க
வாள்வே லேந்து

மங்கையர்கோ னென்றிவர்கள்
மகிழ்ந்து பாடும்

செய்ய தமிழ் மாலைகள் நாம்
தெளிய வோதித்

தெளியாத மறைநிலங்கள்
தெளிகின் றோமே

(தேசிகப்பிரபந்தம்- அதிகார சங்கிரகம்-1)

இவருக்குப்பின் இவர் மகன் நைனார் ஆசாரியர் பொறுப் பேற்றார். இவர் கேரளாவில் சுற்றுப்பயணம் செய்து பலரை வைணவ சமயத்திற்கு மாற் றினார். இவருடன் பலமுள்ள வடகலைப்பிரிவு முடிவுக்கு வந் தது.

தென்கலை வழியினரில் முதன்மையான ஆசாரியராக விளங்குபவர் எம்பார் என்ப வரே என்பதை முன்னரே கண் டோம். அடுத்தவர் கூரத்தாழ்வா னின் திருக்குமாரரான பரா சர பட்டர் ஆவார். இவ்வகை யில் இருவழிகளின் முதன்மை ஆசாரிய பரம்பரையினர் தொண்டை நாட்டினரே. (வட கலை வழியினரில் எங்களாழ் வான் தவிர அனைவருமே தொண்டை நாட்டினராவர்)

தென்கலை ஆசாரியர்களில் இறுதியில் உள்ள மணவாள மாமுனிகளின் தலைமைச் சீடர் கள் எண்மர் 'அட்டதிக்கயங் கள்' என அழைக்கப்பெற்றனர். அவர்களுள் திருவேங்கடராமா னுஜ ஜீயர். பிரதிவாதி பயங் கரம் அண்ணன், எறும்பியப்பா ஆகியோர் தொண்டை நாட்டி னரே.

**பிரதிவாதி பயங்கரம் அண்ணன் (1340-1440)**

காஞ்சியைச் சார்ந்தவர். தேசி கரையும் அவர் மகன் நயி னாச்சாரியரையும் குருவாகக் கொண்டு, வடகலைச் சம்பிர தாயங்களைக் கற்றவர். (Dr. Jagadeesan, History of Vaishnavism, P.128) பின்னர் மண வாள மாமுனிகள் அட்டதிக்க யங்களில் ஒருவரானார். தேசி கரைப் புகழ்ந்து 'சப்தாதி ரத் னாகரம்' என்னும் செய்யுளை இயற்றினார். ஸ்ரீபாஷ்ய வியாக்கியனம், அஷ்டசுலோகி வியாக்கியானம் ஆகியவற்றை எழுதினார். இவர் வழி வந்த பிரதிவாதி பயங்கரம் அண்ணங்சராச்சாரியார் என்ப வர் பல பிரபந்தங்களுக்கும் (திவ்வியார்த்த தீபிகை) உரை எழுதி, பதிப்பித்து வெளியிட் டுப் பெருந்தொண்டாற்றி, அண் மையில் பரமபதித்தது அனை வரும் அறிந்ததே.



புகழ்பெற்ற லிங்கம் இடம் பெற்றுள்ள சிவன் கோயில் —போஜ்பூர் - ம.பி.

**ஏறும்பியப்பா (ஏ)**
**தேவராஜாசார்யா**

இவர் சோளங்கிபுரத்தை (சோழசிம்மபுரம்) அடுத்த ஏறும்பியில் பிறந்தவர். இவர் 'தினசரியா' எனும் நூலை எழுதினார்.

**தாதாசாரியார் குடும்பம்:**

பெரிய திருமலை நம்பியின் வமிசத்தவர்களே தாதாச்சாரியர் ஆவர். அவர்கள் . பல இடங்களில் பிரிந்து பல குடும்பங்களாக வாழ்ந்தனர். காஞ்சியில் வசித்தோர் தாதாசாரியர் எனப்பட்டனர். இவர்களில் புகழ் பெற்ற இலட்சுமி குமாரதாதாசார்யார், விஜயநகர அரசர் வெங்கா 1-வின் குருவாக விளங்கினார். (1585-1614) மற்றும் கோடி கன்னிகாதானம் தாதாசாரியரும் புகழுடன் விளங்கினார் இவரைப்பற்றிய பல கல்வெட்டுகள் ஸ்ரீவரதராஜர் ஆலயத்தில் உள்ளன. (363 of 1919, S.I.T.I., III, Pt.II, P.1358/475 of 1919/92 and 95 of 1923.) தென்னேரியில் இவர் பெரிய ஏரியை வெட்டுவித்தார். பல சந்நிதிகளை அமைத்தார். இவர் அக்காலத்தில் பல வைணவத் திருத்தலங்களின் பொதுமேலாளராய் விளங்கினார். (479 of 1919) பல கோயில்களில் தேசிகருடைய விக்கிரங்களை அமைத்தார். இவருடைய பெயரர் அரங்கநாதன் என்பவர் 'பிரபந்நாம்ருதம்' - என்னும் நூலை எழுதினார்

**இறுவாய்:**

பிராம்மணரல்லாததோரும்



ஸ்ரீயோகநரசிம்மசுவாமி கோயில்--சோளிங்கர்.

ஆசாரியராக விளங்கி வைணவ சமயத்தை வளர்த்துள்ளனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் புவனகிரி அழகிய மணவாள ராமாநுஜ ஏகாங்கி சுவாமிகள்(7-7-1860 - 10-6-1927) மற்றும் புதுவை விலட்சண கவி ஏ.வே. இராமாநுஜ நாவலர் சுவாமிகள் (1829-1891) ஆகியோராவர். நாவலர் சுவாமிகள் பாத்மோத்ர புராணம், திருச்சித்திர கூடத்தல புராணம் முதலிய பல தலப்புராணங்களையும் மற்றும் பால சம்வாத வினாவிடை போன்ற சமய நூல்களையும் இயற்றி வைணவ சமயத்திற்கு அவர் காலத்தில் ஏற்றம் அளித்தார். அவர் நினைவைப் போற்றும் வகையில் பல வைணவ சபைகள் - பண்ணுருட்டி, புதுவை முதலிய இடங்களில் அமைந்து, பல வழிகளிலும் வைணவ சமயப் பயிரைத் தொடர்ந்து வளர்த்து வருகின்றன. இவ்வகையில் முதலாழ்வார்கள் தொடங்கி, உடையவர் நடுவாக, தேசிகர், பிரதிவாதிபயங்கரம் அண்ணன், நாவலர் பெருமான் முடிவாக வாழ்ந்த ஆழ்வார்கள் ஆசாரிய ப்ரம்பரையில் எண்ணெய் ஒழுக்காகத் (தைல தாரை போல) தொடர்ந்து தொண்டை நாட்டில் வைணவ சமயம் வளர்ந்து வந்திருக்கிறது; வருகிறது; வரும் என அன்புடன் கூறிக்கொண்டு இக்கட்டுரையை நிறைவு செய்கின்றேன்.

* * *



இன்றோ திருவாடிப் பூரமெமக்காக
அன்றோ விங்காண்டாளவதரித்தாள்
-குன்றாத
வாழ்வான வைகுந்த வான்
போகந் தன்னையிகழ்ந்து
ஆழ்வார் திருமகளாராய்.

என்று ஈடுபட்டு உரைப்பர்.

"திருவாடிப்பூரம் என்று திருநட்சத்திரத் திருநாள் இன்றோ? இப்படி இருப்பதொருநாள் நமக்குக் கிடைக்கப்பெற்றது இன்றோ? பெறுப்பேறுனால் அதுதான் ஈடுபாட்டுக்குக் காரணமானதானன்றோ?" என்று ஈடுபடுவர். இவ்ஈடுபாட்டுக்குக் காரணம் காட்டும் வகையில், 'குழந்தையானது கிணற்றிலே விழுந்தால் ஒக்கக்குதித்து எடுக்கும் தாயைப் போலே பிறவிக்கடலுள் மூழ்கியிருக்கும் நம்மை எடுக்கைக்காக வன்றோ எல்லாவுலகுக்கும் தாயானவள்

# பெரியாழ்வாரின் பெண்பிள்ளை

டாக்டர் மா. வரதராஜன். திருப்பதி.

மயர்வற மதிநல மருளப் பெற்ற ஆழ்வார்கள் பதின்மருடைய வைபவத்தில் ஈடுபட்டு ஆசார்ய அபிமானத்தில் ஊன்றியவர்கள் ஆண்டாள், மதுரகவிகள், எதிராசர் ஆகிய மூவராவர். இம்மூவருள் முதல்வரான ஆண்டாளுடைய வைபவம் சீர்மையுடைத்து, பெரிய பிராட்டியார் ஸ்ரீஜனகராஜன் திருமகளாக அவதரித்தாற்போல், ஸ்ரீபூமிப்பிராட்டியாரான ஆண்டாள் ஆழ்வார் திருமகளாக அவதரித்தாள்.

ஆண்டாளுடைய வைபவம் பற்றி மணவாள மாமுனிகள் தாம் அருளிய உபதேசரத்தின மாலை என்னும் பிரபந்தத்தில் மூன்று பாசுரங்கள் அருளியுள்ளார்.

ஆண்டாள் திருவாடிப் பூரத் திருநட்சத்திரத்தில் ஸ்ரீவில்லிப் புத்தூரில் அவதரித்தவள். ஆண்டாளது அவதாரச் சிறப்பைக் கூறும் போது மாமுனிகள்,

இந்த மண்ணுலகில் வந்து அவதரித்தருளிற்று' என்பர் பிள்ளைலோகம் சீயர். இப்படி வந்து அவதரிக்கையால் உண்டான அருமையைச் சொல்லும் போது 'குன்றாத வாழ்வான வைகுந்த வான்போகந்தன்னை யிகழ்ந்து" என்பர் மாமுனிகள். வைகுந்த போகமானது குறையற்ற பெருமையையுடைய ஸ்ரீவைகுண்டத்தில் எம்பெருமானது எல்லையற்ற அநுபவமாகிற பெரிய போகமாகும். இப்போகமானது மற்றவர்களு

டைய போகங்களைப் போலல்லாமல் குறையற்றது. இத்தகைய போகத்தை வழுவாமல் அனுபவித்தவளாகையாலே 'போகத்தில் வழுவாத புதுவயர்கோன் கோதை' என்று ஆண்டாளே தம்முடைய பிரபந்தத்தில் அருளியது நினைதற்பாலதாகும். இத்தகைய பெருமை பெற்ற பேற்றை விட்டுப் பெரியாழ்வாரின் பெண் பிள்ளையாய் அவதரித்தாள் ஆண்டாள். இதனை மகாராணியானவள் ராஜாவினுடைய பூம்படுக்கையையை விட்டு குழந்தையினுடைய தொட்டிலைக் கட்டிக் கொண்டு கிடந்து அக்குழந்தையயைக் காப்பது போல ஆண்டாளும் நித்யமான பரமபதத்தில் எல்லையற்ற ஆனந்தத்தை விட்டு விட்டு இங்கே வந்து உலக மக்களை உய்விக்கப் பிறந்ததாகக் கூறுவர் சீயர்.

அடுத்து, இப்படி ஆண்டாள் அவதரித்த திருவாடிப் பூரத் திரு நட்சத்திரத்தினுடைய ஒப்பில்லாமையால் வந்த சிறப்பைக் கூறுகிறுர்.

பெரியாழ்வார் பெண்பிள்ளையாய்
ஆண்டாள் பிறந்த
திருவாடிப்பூரத்தின் சீர்மை
ஒருநாளைக்
குண்டோ மனமே யுணர்ந்துபார்
ஆண்டாளுக்
குண்டாகிலொப் பிதற்குமுண்டு.

திருமாலைக் கட்டுகையே தொழிலாகவுடையவர் பெரியாழ்வார். இவர் நந்தவனத்தில் திருத்துழாய்ச் செடிக்கீழே அவதரித்த ஆண்டாளை எடுத்துக் கொண்டு போய் தம் மனைவியிடம் கொடுத்தார். மலடியாயிருந்த அவளும் பிறர் பெண்டாயிருக்கிற இப்பெண்பிள்ளையை மிக்க அன்புடனே எடுத்துக் கொண்டாள். அப்போது 'வன முலைகள் சோர்ந்து பாய' என்று பெரியாழ்வார் அருளியபடியே முலைகள் ஆண்டாள்கண் பாலைச் சொரிந்தன. ஈன்ற தாய்மார்க்

கன்றோ தங்கள் குழந்தை பக்கல் இரக்கம் பிறந்து இப்படியாவது. அவ்வகையில் ஆண்டாள் பெரியாழ்வார் பெண்பிள்ளையாய்ப் பிறந்த மெய்ப்பாடு இங்கு தோன்றியபடி, 'உலகுடைய நாய்ச்சியாரிறே உலகத்திலே வந்து அவதரித்தது' என்பர் சீயர். இவள் பிறக்கைக்குக் காரணமே சீர்மையை உண்டாக்கியதாம். இந்த நாளின் சீர்மை வேறு ஒரு நாளுக்குமில்லையாம். இது பற்றியே மாமுனிகள் 'மனமே உணர்ந்து பார்' என்கிறுர். அதாவது இவற்றின் வாசியறிகைக்குத் துணையான மனமே! மேலெழுவன்றிக்கே உள்ளூற உணர்ந்து உணர்ந்து பார்' என்றபடி. எல்லா உலகை ஆளுமவளான பூமிப்பிராட்டியாரான ஆண்டாளுக்கு ஒப்புண்டாகில் இந்நாளுக்கும் ஒப்புமை உண்டு. மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் விஞ்சின பொறுமை, தயை முதலான குணங்களையும் நாவால் தொகைக்க முடியாத அழகையும் உடையவளாம் ஆண்டாள்.

இப்படி ஆழ்வார்களைக் காட்டிலும் மிக்க சிறப்பையுடையவளான ஆண்டாளை மகிழ்ச்சியுடன் துதிக்க வேணும் என்று தம் திருவுள்ளத்தைக் குறித்து அருளிச் செய்கிறுர் மாமுனிகள்.

அஞ்சு குடிக்கொரு சந்ததியாய்
ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சி நிற்குந்
தன்மையளாய் - பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப்
பத்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து.

பாண்டவர்கள் ஐவர்க்கும் பரிக்ஷித்து ஒருவனே பிள்ளை வித்து (ஸந்தான பீஜம்) ஆனாற்போல் ஆண்டாளும் சரணாகதியில் ஊன்றிய ஆழ்வார்கள் பதின்மர்க்கும் திருமகளாம்படியான ஒரு மகளானது பற்றி 'அஞ்சு குடிக்கொரு சந்ததி' என்றுர். இவள்தான் ஞானபுத்திரியாகப் பிறக்கையாலே 'குலமகள் கோதை' என்றனர். மேலும் வேறு காலத்தில் எம்பெருமான் செய்த வீரச் செயலுக்கு வெறுமனே பயப்பட்டு மங்களாசாசனம் செய்த பெரியாழ்வார் குலத்துக்கு ஒப்பற்ற திருமகளாய் இருந்தது பற்றி 'அஞ்சு குடிக்கு ஒரு சந்ததி' என்றதாகக் கூறுவர். ஆண்டாளே 'அன்றிவ்வுலகமளந்தாயடி போற்றி' என்று தொடங்கி வேறு காலத்தில் நடந்த வீரச்செயலுக்குத் தோற்று மங்களாசாசனம் செய்தாளன்றே. இப்படி பண்ணுகைக்குக் காரணம் அவள் குடிப்பிறப்பன்றே, ஆனது பற்றியே அஞ்சுகுடி என்று இக்குடிக்குப் பெயர் வந்ததாகக் கொள்ளத்தகும்.

இவ்வாறு அஞ்சுகுடிக்கு ஒரு சந்ததியாய்ப் பிறந்த ஆண்டாள், மற்ற ஆழ்வார்களின் செயலையும் விஞ்சி நிற்கும்

தன்மையுடையவளாம். அதாவது தம் தந்தையான பெரியாழ்வாரோடு ஒப்பிட்டுச் சொல்லும் போது அவரைப் போலவே தாமும் மங்களாசாசனம் செய்தாள். ஞானம், பக்தி, வைராக்யம் ஆகியவற்றைக் காணும் போது ஆழ்வார்கள் பதின்மரைக் காட்டிலும் விஞ்சியிருந்தாள் ஆண்டாள். எவ்வாறெனில், ஆண்டாளுக்கு பதின்மருடைய பக்தியும் பெண்மையடியாக வருகையாலும், இன்னமும் ஆழ்வார்களைப் போலே பக்தியின் முதிர்ச்சியால் பெண்மை ஏறிட்டுக்கொள்ள வேண்டாது தானான தன்மையையுடைய வளாகையாலும் அவர்களைக் காட்டிலும் மிக்க அதிசயமான பக்தி முதலான தன்மைகளை உடையவளானாள் ஆண்டாள். அதாவது ஆழ்வார்கள் எம்பெருமானை அடைவதிலுள்ள விரைவின் மிகுதியாலே நோன்பு நோற்கை, மடலூர்கை முதலானவற்றில் வேறு உபாயத்தைப் பற்ருது எம்பெருமான் ஒருவனையே உபாயமாகப் பற்றினர். அவ்வாறு இல்லாமல் ஆண்டாள் காமனைக் குறித்து 'பேசுவது ஒன்று உண்டு இங்கெம்பெருமான்' என்றும், 'உன்னையும் உம்பியையும் தொழுதேன்' என்றும், 'தொழுது முப்போதுமுன்னடி வணங்கி' என்றும் அவனைப் பரதேவதையாக எண்ணி அவன் காலிலே விழுந்த இந்த அநந்ய தைவத்ய பஞ்ஜகமான காரியத்தில் மூளுகை அவர்களைக் காட்டிலும் விஞ்சியிருத்தலால் இது ஆண்டாளுக்கு நிலை நின்ற தன்மையாயிற்று.

இப்படி விஞ்சி நின்ற தன்மையளான ஆண்டாளை இளமையாயிருந்தே பரிபக்குவமானவள் என்பது தோற்ற 'பிஞ்சாய்ப் பழுத்தாளை' என்கிருர் மாமுனிகள். அதாவது பொதுவாக உலகில் ஒரு பழமானது முதலில் பிஞ்சாய்ப் பின்பு காயாய், இப்படிச் சில நாட்கள் சென்றதும் அதுவே பழமாகும். அவ்வாறில்லாமல் பழுக்காத பிஞ்சு தானே பழுத்துப் பழமாவது போல ஆயிற்று ஆண்டாளுடைய பரிமாற்றமும். பரிமாற்றமாவது எம்பெருமானைக் காணவேண்டும் என்கிற ஆசையான பரபக்தி. பரபக்தி வளர்ந்து நெஞ்சென்னும் உட்கண்ணுலே கண்டதான பரஞானம் கண்ட எம்பெருமானை அடைந்தாலல்லது தரியாத நிலையான பரம பக்தியாய் ஞானம் கனிந்த நலமாகும். இப்படிப்பட்ட நலமான பரமபக்தியானது அறிவு நடையாடாத வயதிலே ஆண்டாளுக்குப் பரிபக்குவமாயிற்று. இவ்வாறு பிஞ்சிலே பழுத்த ஆண்டாள் அறிவுக்கு அளவில்லாத ஐந்து வயதிலே திருப்பாவை அருளினாள். ஆழ்வார்களுக்கு பாகவத விஷயத்திலுண்டான சரம ஞானம் ஆண்டாளுக்கு முதலே உண்டாயிற்று. அதாவது 'நெடுமார்கடிமை' என்னும் திருவாய்மொழியில் நம்மாழ்வார் 'நனிமாக் கலவியின்பமே நாளும் வாய்க்க நங்கட்கே' என்றும், 'தமர்கள் தமர்கள் தமர்களாம் சதிரே வாய்கக தமியேற்கே' என்றும் அடியார்குழாங்களைக் காண்பதில் இனிமையைக் காட்டுகிருர். திருமங்கையாழ்வாரும் 'கண்சோரவெங்குருதி' என்ற திருமொழியில் அடியார்குழாங்களின் பெருமையைக் கூறும் போது,

> 'தண்சேறை எம்பெருமானுக்கடியார்
> தம்மைக்கண்டு
> எனக்கிது காணீரென்னெஞ்சும்
> கண்ணினையும் களிக்குமாறே

என்றும்

> 'தண்சேறை எம்பெருமான்ருளை
> நாளும் சிந்திப்பார்க்
> கென்னுள்ளம் தேனூறி
> எப்பொழுதும் தித்திக்குமே

என்றும் அருளியது நினைதற்பாலதாகும். இவ்வாறு நெடுந்தூரம் போகாமல் திருப்பாவை தொடக்கத்திலேயே ஆண்டாள் 'போதுவீர் போதுமினோ' என்றும் 'எல்லாரும் போந்தாரோ' என்னும் அடியாட்ககுழாங்களின் சிறப்பைக் காட்டும் வகையில் ஆழ்வார்களுக்கு முதலிலே உண்டானது காணலாம்.

இப்படி பரிபக்குவமான தன்மையளாய் கீழே சொன்ன குணங்களுக்கெல்லாம் ஒக்கும்படியான ஏற்றத்தையுடைய ஆண்டாளை 'பத்தியுடன் நாளும் வழுத்தாய் மனமே மகிழ்ந்து' என்று உரைக்கிருர் மாமுனிகள். அதாவது ஆண்டாள் பகவத் விஷயத்தில் கண்ணழிவற்ற பக்தியைக் காட்டினாற்போலே, தம் மனத்தைக் குறித்து, ஆண்டாள் திறத்து பக்தியுடனே நித்யமாக 'மங்கையும் பல்லாண்டு' என்று துதிக்க வேண்டுகிருர்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



பொள்ளாச்சி வட்டாரத்தில்

# மும்மூர்த்திகள் வழிபாடு

திரு. தி. இராசமாணிக்கம் - பொள்ளாச்சி.

ஒரு காலத்தில் பிரஜாபதி எனச் சிறப்பாகப் போற்றப்பட்ட பிரம்மா மும்மூர்த்திகளில் ஒருவ ராகக் கருதப்பட்ட போதிலும் நாளடைவில் தன் பெருமையை இழந்து விட்டார். தமிழகத் தின் முதற் குடைவரைக்கோயி லான மண்டகப்பட்டுக் குடைவ ரைக் கோவில் பல்லவப் பேர ரசன் மகேந்திரவர்மனால் மும் மூர்த்திகளுக்காக உருவாகப்பெற் றதாம். இது "பிரமீசுவர விஷ்ணு லக்ஷித குடைவரைக் கோயில்" என அழைக்கப்பெ றுகிறது. இங்குள்ள மூன்று கருவறைகளில் எந்த இறை உருவும் இல்லை. மாமல்லபுரத் தில் உள்ள திரிமூர்த்தி குடை வரைக்கோயிலில் வடபுறமாக உள்ள கருவறையில் பிரம்மா புடைச்சிற்பமாகக் காணப்படுகி றார். இவற்றைத் தவிர மும் மூர்த்திகள் கோயில்கள் என வணங்கப்பெறும் கோயில்களில் கூட பிரம்மாவிற்குத் தனிச் சந் நிதி கிடையாது. கொடு முடி மகுடேஸ்வரர் கோயில் (பெரியார் மாவட்டம்) ஆயிர வேலி அயிரூர் திருவாலீசுவ ரர் கோயில் (திருச்சி மாவட்டம்) ஆகியவற்றை உதாரணங்களா கக் கூறலாம். இங்கெல்லாம் பிரம்மா தனியாக மரத்தடியில் தான் காணப்படுகின்றார்.

பொள்ளாச்சி வட்டத்தில் ஒரு சில கோயில்களில் சிவன், திரு மால், மற்றும் பிரம்மா ஆகிய மூவரும் ஒன்றாக - மூலவர்களாக வைக்கப்பட்டு வணங்கப்பட்டு வருகின்றனர். இந்தக் கோயில் களில் பொதுவாக அமணலிங் கேசுவரர் கோயில், அமணீசுவ ரர் கோயில், அம்மண ஈசுவர் கோயில் என்றெல்லாம் பலவா றாக வழங்கப்பட்டு வருகிறது. இந்தக் கோயில்களுக்கு எல்லாம் முன்னோடியான கோயில் உடு மலை வட்டத்தைச் சார்ந்த திரு மூர்த்தி மலையில் உள்ள அம ணலிங்கேஸ்வரர் கோயில் என் பதாகப் புலனாகிறது



### அமணலிங்கேசுவரர் திருக்கோயில்-திருமூர்த்திமலை

கருவறை குன்றையொட்டிக் கட்டப்பட்டுள்ளது. கருவ றையில் எந்த இறைவடிவமும் இல்லை. குன்றின் மேல்பகுதி யில் கீழ்புறமாக மூன்று வடிவங் கள் புடைச சிற்பமாகக் காணப் படுகின்றன. இவை நேராகவோ இல்லை தலைகீழாகவோ இல் லாது பக்கவாட்டில் காணப் படுகின்றன. பெருமழை கார ணமாக இக்குன்று உருண்டிருக்

மனிதனின் வாழ்க்கையில் மணப்பருவம்தானே மிக்க மகிழ்ச்சியானது! மணமாக வேண்டிய வயதினில் திருமணமாகாமலே எத்தனையோ குடும்பங்களில் கன்னிகையர் காத்துக்கொண்டிருக்கின்றனர். அவர்களின் பெற்றோர்களும் சொல்லொண்ணா மனத்துயரடைகின்றனர். அவர்கள் தங்கள் கன்னிகைகளுடன் சென்று வந்தத் திருத்தலங்கள்தான் எத்தனை எத்தனையோ! வேண்டிக்கொண்ட தெய்வங்களும்தான் எத்தனை எத்தனையோ! காக்கும் நோன்புகள் - விரதங்கள், துதிபாடும் பாராயண நூல்கள்...அடேயப்பா! கணக்கிலடங்கா!

தம் மகன்களுக்கு, தன் கன்னிகைகளுக்குக் கல்யாணம் கைகூட, இதோ ஓர் மிக எளிய வழி! காசு பணம் செலவில்லை! ரயிலிலும், பஸ்ஸிலும் நெருக்கடியில் பயணம் செய்யவேண்டாம். வீட்டிலேயே இருந்த இடத்தில் இருந்துகொண்டே, மணமாக வேண்டிய பெண், பையன் இவர்களின் தாயார் செய்யவேண்டிய ஓர் சுலபமான பிரார்த்தனைதானிது!

# கௌரீ கல்யாணம், வைபோகமே!

'மயூரப்ரியா'

தினமும் ஸ்நானம் பண்ணிவிட்டுக் காலையிலும், கைகால்களை சுத்தம் செய்து கொண்டு மாலையிலும், குத்துவிளக்கை (ஐந்து முகங்களும்) ஏற்றிவைத்துக் கொண்டு, தரையில் கோலம் போட்டு, ஒரு தட்டிலோ மணைப்பலகையின் மீதோ வைத்து, மூன்று முறைப் பிரதட்சண நமஸ்காரம் செய்யவும். கிழக்கோ வடக்கோ நோக்கிப் பலகையிலமர்ந்து கொண்டுப் பின்வரும் தியான ஸ்லோகத்தை ஜபிக்கவும்.

'ஸுக்லாம்பரதரம்' சொல்லி, தலையில் குட்டிக் கொண்டு ஸ்ரீமகா கணபதியைத் தியானம் செய்து கொண்டு நமஸ்கரிக்கவும்.

**ஓம் கணபதயே** நம:
**ஓம் குருப்யோ** நம:

என்றுகூறி மும்முறை நமஸ்காரம் செய்துவிட்டுக் கீழ்க்காணும் ஸ்லோகத்தை 108 முறை(க்குக் குறையாமல்) உச்சரிக்கவும்.

ஓம் யோகினி யோகேஸ்வரி யோகாபயங்கரி
ஸகல ஸ்தாவர ஜங்கமமுக ஹ்ருதயம் மம வஸம் ஆக்ரிஷ்ய
மம குமார குமாரி விவாகம் ஆகர்ஷய ஆகர்ஷய க்லீம்வஷட ஸ்வாகா




பின்பு பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து, தேன், பால் கலந்து நிவேதனம் செய்து கர்ப்பூர தீபாராதனை செய்து நமஸ்கரித்துப் பிரார்த்தித்துக்கொள்ளவும்.

வைராக்கியமும், திடமான நம்பிக்கையும்தான் மிகவும் தேவையானவையாகும். வீட்டுவிலக்கு, அசுபமான காரணமாயேற்பட்ட 'தீட்டு' தினங்களில் இதனை செய்யலாகாது. எவ்வளவுக்கெவ்வளவு பக்தி சிரத்தையுடன் செய்கிறீர்களோ அதற்கேற்றவாறு நற்பலன் விரைவில் கிட்டும்! உறுதி! உணர்வீரே!

கலாம். நடுவில் உள்ள வடிவம் பத்மாசனத்தில் அமர்ந்து தன் இரு கைகளையும் ஒன்றின் மேல் ஒன்ருக மடிமீது அதாவது யோகமுத்திரையில் வைத்துள்ளது. இதற்கு இருபுறமும் உள்ள வடிவங்கள் நின்ற நிலையில் உள்ளன. எல்லா வடிவங்களுக்கும் இருகைகள்தாம் உள்ளனவேயன்றி, இந்து தெய்வங்களுக்கு, பொதுவாக உள்ளது போன்று நான்கு கைகள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. கைகளில் எந்தப் படைக்கலமும் காணப்படவில்லை. நடுவில் உள்ள வடிவின் தலையில் ஜடா மகுடம் போன்ற அமைப்பும் இல்லை. எனவே இது சமண தீர்த்தங்காரர் வடிவம் எனக் கோவைக்கிழார், ம. இராமச்சந்திரன் செட்டியார் போன்ற அறிஞர்கள் கருத்து தெரிவித்துள்ளனர். இம்மூன்று வடிவங்களையும் மும்மூர்த்திகள் என இன்று வரையில் போற்றி வணங்கப்பட்டு வருகின்றனர். மாதாந்திர அமாவாசை, மகா சிவராத்திரி போன்ற நாட்களில் ஆயிரக்கணக்கான அன்பர்கள் வந்து வழிபட்டுச் செல்கின்றனர். இந்தக் கோயிலில் உள்ள வடிவங்களின் அடிப்படையில் பொள்ளாச்சியைச் சுற்றிப் பல கோயில்கள் எடுப்பிக்கப்பட்டுள்ளன.



## பெயர்க் காரணம்:

சமணர்களைத் திருஞானசம்பந்தர் சமணர், சமண், அமணர் அமண் என்றெல்லாம் தம் திருப்பதிகங்களில் குறிப்பிட்டுள்ளார். இங்குள்ள வடிவம் சமணதீர்த்தங்காரர் எனப்படுவதால் இறைவனது பெயர் அமணீசுவரர் (அமண் + ஈசுவரர்) எனப்படுவதாகக் கொள்ளலாம். மேலும் மண் என்ருல் உலகம். அதாவது விருப்பு, வெறுப்புகளைச் சுட்டிக்காட்டுவதாகக் கொண்டால் அ என்ற சொல் எதிர்மறைப் பொருளைத் தருவதால் அமணீசுவரர் என்பதற்கு விருப்பு வெறுப்புகள் அற்றவன் என்பதாகிறது. "வேண்டுதல் வேண்டாமை இலான்" என்பது திருவள்ளுவர் திருவாக்காம். இது இங்குள்ள சிவனின் தவக்கோலத்திற்கு ஏற்ப உள்ளது. கஞ்சம்பட்டி, சூளநாயக்கன்பட்டி ஆகிய இடங்களில் உள்ள கோயில்கள் மலையாண்டிசாமி கோயில் என்றும் பொள்ளாச்சி சிங்காநல்லூரை அடுத்த கோயில் சித்தாண்டீஸ்வரர் கோயில் என்றும் வழங்கப்படுவதும் இறைவனின் தவக்கோலத்தை வலியுறுத்தத்தான்.

மணம் என்ருல் வாசனை. வாசனை என்பது மும்மலங்களையும் குறிக்கும். எனவே அமணலிங்கேசுவரர் என்ருல் மும்மலங்கள் அற்றவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

ஒரு சில இடங்களில் அம்மண ஈசுவரர் என்றும் சொல்லப்படுகிறது. அநுசுயாவிடம்

மும்மூர்த்திகள் பிச்சை கேட்ட புராண வரலாறுடன் இங்குள்ள வடிவங்கள் தொடர்புபடுத்திப் பேசப்படுகின்றது. அநுசுயாவிடம் மும்மூர்த்திகள் நிர்வாணமாக வந்து பிச்சையிட வேண்டும் என்று கேட்டபடியால் (உலக வழக்கில் நிர்வாணம் என்பது அம்மணம் என்றும் வழங்கி வருகிறது) இறைவனுக்கு அம்மன ஈசுவரர் என்ற பெயர் ஏற்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

### பொள்ளாச்சியைச் சுற்றியுள்ள கோயில்கள்

பொள்ளாச்சியைச் சுற்றி இதுவரை 13 கோயில்களைப் பற்றிய விவரங்களை டி.வி.எஸ். பார்சல் நிறுவனத்தைச் சார்ந்த அன்பர்கள் திருவாளர்கள் பூபாலகிருஷ்ணன் மற்றும் இராமலிங்கம் என்பவர்கள் என்னிடம் தெரிவித்ததின் போரில் நானும் அவற்றைச் சென்று பார்த்தேன். இத்தகைய கோயில்கள் இன்னமும் இருக்கலாம். அந்த 13 இடங்களாவன:

1. ஊத்துக்குளி
2. கஞ்சம்பட்டி
3. மஞ்சநாயக்கனூர்
4. கூளநாயக்கன்பட்டி
5. தேவப்பாடிவலசு
6. குறும்பபாளையம்
7. ஜலத்தூர்
8. கரப்பாடி
9. சித்தாண்டீசுவரர்கோயில்
10. தேவனாம்பாளையம்
11. T. கொட்டாம்பட்டி
12. கருப்பம்பாளையம்
13. பணிக்கம்பட்டி

முதல் மூன்று இடங்களில் மும்மூர்த்திகள் வடிவங்கள் தனித்தனியாக ஒரே பீடத்திலும், கூளநாயக்கன்பட்டியில் மூன்று வடிவங்களும் ஒரே கல்லில் புடைச் சிற்பமாகவும் உள்ளன. தேவம்பாடிவலசில் சிவன் நடுவில் இருக்க, இருபுறமும் அன்னையர் காணப்படுகின்றனர் இவை பிற்காலத்தனவாகத் தெரிகின்றன. பழமையான அழகு மிக்க இவரது தவக் கோலம் கோயிலுக்கு வெளியில் மரத்தடியில் காணப்படுகிறது. இதனைச் சேர்ந்த திருமால் மற்றும் பிரம்மாவின் வடிவங்கள் என்னவாயிற்று என்று தெரியவில்லை.

ஆறு முதல் பத்தாவது இடங்களில் மூன்று இலிங்கங்கள் அமைக்கப்பட்டு அவை மும்மூர்த்திகளாக வணங்கப்படுகின்றன. தேவனாம்பாளையம் நீங்கலாக ஏனைய இடங்களில் மூன்று இலிங்கங்களும் ஒரே பீடத்தில் இருக்க, தேவனாம்பாளையத்தில் மட்டும் நடுவில் உள்ள இலிங்கம் ஆவுடையாருடன் அமைக்கப்பட்டு, இருபுறமும் இரு இலிங்கங்கள் தனியாகக் காணப்படுகின்றன. இலிங்கத்தின் பாணத்தில் மூன்று பாகங்கள் உண்டு என்று ஆகமங்களில் சொல்லப்பட்டுள்ளது. கீழே உள்ள சதுரமான பகுதி பிரம்ம பாகம் என்றும், நடுவில் உள்ள எட்டுக்கோணம் கொண்ட பகுதி திருமால் பாகம் என்றும், மேலே உள்ள நீண்ட வட்டப்பகுதி சிவனது பாகம் என்றும் கூறப்பட்டுள்ளது. இதன் அடிப்படையில்தான் இங்கு மும்மூர்த்திகளுக்கும் மூன்று இலிங்கங்களை அமைத்தனர் போலும். T. கொட்டாம்பட்டி மற்றும் கருப்பம்பாளையத்தில் ஒரே இலிங்



கம்தான் உள்ளது. பணிக்கம் பட்டியில் பாணம் இன்றி ஆவுடையார் அமைப்பில் இயற்கையாகப் பாறை காணப்படுகிறது. ஆனால் இந்த மூன்று இடங்களில் உள்ள கோயில்களும் அம்மணீசுவரர் கோயில் என்றே அழைக்கப்படுகிறது.

## மும்மூர்த்தி வடிவங்கள்

முதல் நான்கு வடிவங்களில் சிவன் நடுவில் பத்மாசனத்தில் உட்கார்ந்து இருக்க, இருபுறமும் திருமாலும், பிரம்மாவும் நின்ற நிலையில் அமைக்கப்பட்டுள்ளன. ஊத்துக்குளியில் மட்டும் பிரம்மா வலப்புறமும் திருமால் இடப்புறமும் இருக்க, ஏனைய மூன்று இடங்களில் திருமால் வலப்புறமும், பிரம்மா இடப்புறமும் உள்ளனர்.

கஞ்சம்பட்டி நீங்கலாக ஏனைய மூன்று இடங்களில் இவரது முன் இரு கைகள் யோகமுத்திரையில் இருக்க, கஞ்சம்பட்டியில் மட்டும் அபயம் மற்றும் வரத முத்திரைகளாக உள்ளன. இவரது 25 மகேச வடிவங்களுக்கோ அல்லது வேறு எந்த வடிவிற்கோ ஆகமங்கள் முன் இரு கைகள் யோகமுத்திரையில் இருக்க வேண்டும் என விதிக்கவில்லை. யோகதட்சிணாமூர்த்தி வடிவிற்கு மட்டும் ஒரு கைதான் மடி மீது இருக்கவேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளதே தவிர, இரு கைகளும் மடி மீது இருக்க வேண்டும் என்று விதிக்கப்படவில்லை. இது திருமூர்த்திமலையில் உள்ள வடிவை ஒட்டி அமைக்கப்பட்டது என்பதை உறுதி செய்கிறது. பின் இரு கைகளில் சூலம், சக்தி அல்லது மழு, மான் ஆகியவை காணப்படுகின்றன.

திருமாலைப் பொறுத்த வரையில் பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, முன் இரு கைகள் அபய, வரத அல்லது ஊறு முத்திரைகளில் உள்ளன

மஞ்சநாயக்கனூரில் மட்டும் பிரம்மாவிற்கு 4 தலைகள் இருக்க, ஏனைய மூன்று இடங்களில் ஒரே ஒரு தலைதான் அமைக்கப்பட்டுள்ளது. அவரது கைகளில் வைத்துள்ளவை இடத்திற்கு இடம் வேறுபட்டுக் காணப்படுகிறது அபய முத்திரையுடன் கைகளில அக்கமாலை, கமண்டலம், ஓலைச் சுவடி, வேள்விக்கரண்டி, தருப்பைப் புல்கட்டு, யோகதண்டம் உருவாக்கப்பெற்ற தடி ஆகியவை உருவாக்கப்பட்டுள்ளன.



ஸ்ரீவீரபத்ரசுவாமி கோயில்
–அல்லாடுபல்லி - கடப்பா மாவட்டம்.

பிற:

சிவன் தவக்கோலத்தில் இருப்பதால், இறைவியின் சந்நிதி இல்லை. சமீப காலத்தில் T. கோட்டாம்பட்டி மற்றும் தேவனாம்பாளையம் ஆகிய இடங்களில் சக்தியின் வடிவம் தனியாக வைக்கப்பட்டுள்ளது.

திருமூர்த்தி மலையில் உள்ளது போன்று மஞ்சநாயக்கனூர், குறும்பபாளையம், சித்தாண்டீசுவரர் கோயில், பணிக்கம்பட்டி மற்றும் தேவனாம்பாளையம் ஆகிய இடங்களில் சப்த கன்னியர் வடிவங்கள் காணப்படுகின்றன.

மும்மூர்த்திகளை ஒரே பீடத்தில் ஒரு சேர வைத்து வணங்குவது தமிழகத்தில் வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.

• • •





ஓம் ஸ்ரீமாத்ரே நம :

# பொதுமக்களுக்கு ஓர் அரிய நற்செய்தி



ஸ்ரீகாஞ்சி ஜகத்குரு ஸ்ரீஜெயேந்திர சரஸ்வதிஸ்வாமிகள், திருமுருககிருபானந்தவாரியார்
மற்றும் பலமகான்கள் ஆசி வழங்கிய நவசக்தி நிலையத்தாரால்
உருவாக்கப்படும் பூஜைக்கு உரிய தெய்வீக சாதனங்கள்

| வ.எண். | யந்திரங்களின் பெயரும் அதன் பலன்களும் | விலை ரூ.பை. |
|---|---|---|
| 1. | பூரண ஸ்ரீசக்கர மாமேருபஞ்சலோகம் அனைத்துத் தெய்வங்களுமே இதில அடங்கியது (மரபீடம் உட்பட) 5 x 5 செ.மீ. ரூ. 500-00 6 1/2 x 6 1/2 செ.மீ. | ரூ. 750-00 |
| 2. | ஸ்ரீமகா கணபதி 8 x 8 செ.மீ. எந்தக்காரியமும தடையின்றி நடகக | ரூ. 130-00 |
| 3. | ஸ்ரீசக்கரம் 8 x 8 செ.மீ. அனைத்துத் தெய்வங்களும் இதில் அடங்கியது | ரூ. 130-00 |
| 4. | ஸ்ரீமகாலட்சுமி மகாயந்திரம் 24 x 24 செ.மீ. 300 ஆண்டுகளுக்கு லட்சுமிகடாட்சத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச்செய்யும் (கோல்ட் பிரேம்) | ரூ.1150-00 |
| 5. | சர்வஜன மன தன ஆகர்ஷணம் ஸ்ரீசாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீமகாசுதர்சனம் 16x48 செ.மீ. (கோல்டு பிரேம்) (மூன்று யந்திரங்கள் சேர்த்து) வியாபாரத்தில் விருத்தியடையவும் லட்சுமிகடாட்சம், பணவரவுக்கும், எதிரிகள் பொறாமை இவைகளைநீக்கி சுபீட்சத்தை உண்டுபண்ணும் | ரூ.1750-00 |
| 6. | சர்வ ஜன மன தன ஆகரஷணம் ஸ்ரீசாம்ராஜ்ய லட்சுமி ஸ்ரீமகாசுதர்சனம 8 x 24 செ.மீ. (கோல்டு பிரேம்)மேற்கண்ட பலனை தரவல்லது | ரூ 500-00 |
| 7. | சூலினி, சரபேஸ்வரர, பரதியங்காரா, 8x24செ.மீ.(கோல்டு பிரேம்) | ரூ 500-00 |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், பரதியங்காரா 16x48 செ.மீ. (கோல்டு பிரேம) மூனறு யந்திரங்கள் சேர்ந்தது வியாபாரத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீககி எதிரிகள் இல்லாமல்செய்யவும் பில்லி, சூனியம், ஏவல்களைநீக்கி, லட்சுமிகடாட்சம் தரவல்லது | ரூ 1750-00 |
| 9. | சர்வ சித்தி யந்த்ரம் விமானம் முதல் கார்கள் வரை ஏற்படும் விபத்துக்களைத் தடுத்துக் காக்கவல்லது | ரூ. 500-00 |
| 10. | ரசமணி ஒன்றின் விலை ரூ. 250/-, ரூ 500/- இது மனதை ஒருநிலைபபடுத்தும், சர்வ காரிய சித்தியும் சுகபோக பாக்கியங்களையும் தரவல்லது. | |
| 11. | கண் திருஷ்டி ஒருபுறம், மறுபுறம் சுதர்சன டாலர், கண் திருஷ்டியால் ஏறபடும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாதுகாக்க வல்லது | ரூ 70-00 |
| 12. | ஸ்ரீச்சகரம் ஒருபுறம், மறுபுறம ஸ்ரீகாமாடசி டாலர, அம்பாள்கடாடசததை ஏற்படுததிச சிரமங்களை நீக்க வல்லது. | ரூ 70-00 |
| 13. | ஸ்ரீகாமாட்சி ஒருபுறம், மறுபுறம் தனாகரஷணடாலர, அம்பாள் கடாடசமும், பொருள் வரவும் தரவல்லது. | ரூ. 70-00 |
| 14. | சௌடாம்பிகை மாங்கல்யபாக்கிய டாலர், அம்பாள் கடாட்சமும, பெண்கள தீர்க்கசுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷடத்தை உண்டாக்கவும் வலலது. | ரூ. 70-00 |
| 15. | விவாகப்ராப்தி டாலர, தடைபட்டு வந்த திருமணம் தடையின்றி நடக்கும | ரூ 70-00 |
| 16. | ஸ்ரீசக்கரம் லட்சுமி பீஜம் டாலர அமபாள் கடாட்டசத்தை நிலைத்திருக்கச் செய்யவல்லது | ரூ. 70-00 |
| 17. | கண்திருஷ்டி படம் (கோல்டு பிரேம்) வீட்டிலும் வியாபாரத்திலும வைபபதால கணதிருஷடி தொல்லைகளை நீக்கி விபத்துககளைத தடுததுக்காபபாற்றவல்லது. | ரூ. 80-00 |
| 18. | தத்தாத்ரேயர் யநதரம் 12x12செ.மீ.(கோல்டு பிரேம்) கண்திருஷடி, பொறாமை, துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீககி காப்பாற்றவல்லது. | ரூ 150-00 |
| 19. | பூஜைககுரிய பஞ்சாயதன செட்டும, பாணலிங்கம், ஸ்படிக லிஙகம பலவிதமான மாலைகள சுத்த வெள்ளியால் செயயப்பட்டவையும் இன்னும பலவிதமான சாதனங்களும கிடைககும் பூஜைககுரிய பாதுகை இங்குக் கிடைககும் | |
| 20. | துளசிமணி மாலை ரூ. 150/- ருதராட்ச மாலை ரூ. 350/- ஸபடிகமணிமாலை ரூ.300/- தாமரைமணி மாலை ரூ. 200/- ஒவ்வொரு மாலையும் 54 மணிகள் கொண்டு சுத்த வெள்ளியில வெள்ளிகவசத்துடன் கட்டியது. | |

விபரங்களுக்குத் தொடர்புகொள்ள வேண்டிய முகவரி :

**ஸ்வாமிஜி ஸ்ரீமுருகபூஷணம்**
ஸ்ரீவித்யா உபாசகர், தலைவர் நவசக்தி நிலையம்,
153, லாயட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்),
கோபாலபுரம், சென்னை-600086
போன்: கடை: 472013 மாமேரு டிரஸ்டு வீடு: 861254

**ஸ்வாமிஜி முருகபூஷணம்**
ஸ்ரீவித்யா உபாசகர்-டிரஸ்டு,
ஸ்ரீமாமேரு டிரஸ்டு நெ.72கௌடியாமடம் ரோடு,
சென்னை-600014 போன்: 861254

"லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து"





திருச்செந்தூரில்

# கந்த சஷ்டி திருவிழா !

"சன்மிஷ்டை"

"முருகன்" அழகிய இனிய தமிழ்ப் பெயர். "முருகு" என்பது "அன்" என்னும் ஆண்பால் விகுதி பெற்று முருகன் ஆயிற்று. முருகு என்னும் சொல்லில் இளமை, மணம், அழகு, கடவுள் தன்மை என்ற நான்கு குணங்கள் ஒலிக்கின்றன. இந்நான்கு குணங்களும் ஒருங்கே இணையப் பெற்றவன் முருகன்.

"என்றும் இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே, உளாய் என் உள்ளத்துறை" என்றூர் நக்கீரர். எங்கெங்கு அழகு மணம் கமழ்கிறதோ, எங்கெங்கு அன்பு வாடை வீசுகிறதோ அங்கெல்லாம் ஆண்டவன் அழகு பெற வீற்றிருக்கிறுன். இயற்கையில் விளங்கி இயற்கையின் பத்தை அள்ளி வழங்கும் ஆண்டவனை இயற்கையில் வழிபடல் இயற்கை அல்லவா!

## ஆறுமுகத்தண்ணல்

அமிழ்தனைய தமிழோடு பயின்று இன்பவாழ்வில் திளைத்த தென்னாட்டுத் தமிழர் இறைவனுக்கு இன்பவுருவை அமைத்துக் கண்டு மகிழ்ந்தனர். இன்பம் அளிக்கும் தமிழும் இன்பக்கடவுளாகிய முருகனை "வேள்" என்று புகழந்துரைக்கும்.

வேள் கண்டார் கண்ணையும் கருத்தையும் கவரவல்ல கட்டழகு வாய்ந்தவன். காதல் விளைவிக்கும் காமனைக் "கருவேள்" என்றும், அருள்விளைவிக்கும் முருகனைச் "செவ்வேள்" என்றும் தமிழ் நூல்கள் கூறும். முருகனைச் "சேயோன்" என்றும் கூறுவர்.

இத்தகைய அழகு வடிவமான முருகன் இருந்து அருள் புரியும் ஆறு இடங்கள் ஆறு படை வீடுகள் எனப்படும். முருகன் தங்கிய ஆறுபடை வீடுகள் அனைத்திலும் மலைகள் அவைகள் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், பழமுதிர்ச்சோலை, குன்றுதோருடல். ஆறுமுகத்தண்ணலாகிய முருகன் ஆறுபடைவீடுகளில் சீருற அமர்ந்து அருள்புரியும் காட்சி அழகு நிறைந்த காட்சியாகும்.

கந்தன் கருணை பெற்ற அடியார்கள் அளவற்றவர். கார்த்திகைப் பெண்கள் அறுவருக்கும் அருளிய ஆறு குழந்

தைகளாகச் சரவணப்பொய்கை யிலே தோன்றிய முருகப்பெரு மான் உலக மாதாவாகிய உமாதேவியார் மகிழ்ந்து கொஞ் சும் பொருட்டு ஆறு முகங்க ளுடனும் பன்னிருகரங்களுட னும் ஒன்று சேர்ந்தபொழுது ஒரே உருவமாய் காட்சியளித் தான் அல்லவா? இக்கந்தன்.

இதனையே ஸ்கந்தபுராண மும்,

"அந்தம் இல்லதோர் மூவிரு
வடிவும் ஒன்ருகிக
கந்தன் என்று பேர் பெற்றனன
கவுரி நனகுமாரன்"

(கவுரி = பார்வதிதேவி)எனக் கூறுகிறது.

கந்தன் என்ற சொல்லுக்கு, "எவ்விதப் பற்றுக்கொடுமின்றி அருவாகித் தானே நிற்கும் தத்துவம் கடந்த பொருள்" எனக் கூறினார் நச்சினார்க்கி னியர் என்னும் புலவர்.

### சஷ்டி விழா விரதம்

குறிஞ்சித் தெய்வமாகிய கந்த வேளுக்குரிய முக்கியமான திரு விழாக்களில் கந்த சஷ்டி விழா வும் ஒன்ருகும். இவ்விழா ஐப் பசி மாதத்தில் அதுவும் சுக்கில பட்சத்தில் ஆறு நாட்கள், வெகு விமரிசையாகக் கொண்டாடப்ப டுவது யாவரும் அறிந்ததே.

இவ்விழா வளர்பிறையில் பிர தமை முதல் சஷ்டி திதி முடிய ஆறு நாட்களில், அமரர்கட்கு கொடிய இடையூறுகள் செய்து வந்த அரக்கர் குலம் முழு வதையும் வதம் செய்து தர் மத்தையும் நீதியையும் நிலை நாட்டியதாகப் புராண வரலா றுகள் செப்புகின்றன.

ஆருவது நாளாகிய ஷஷ்டி யில் அசுரர் தலைவனாகிய சூர பத்மன் சங்கரிக்கப்பட்டதால் அந்நாள் மற்ற நாட்களை விட மிகவும் சிறப்புள்ளதாகக் கருதப் படுகிறது. முருகன் அடி யார்கள் இவ்விழாக்காலம் முழு வதும் உண்மையான விரதம் அனுஷ்டிக்கிருர்கள். இதற்கு "ஸ்கந்த ஷஷ்டி"விரதம் என்று பெயர்.

இவ்விரதகாலம் முழுவதும் அன்ன ஆகாரமின்றி செல்வ முருகனின் புகழ்மாலைகளைப் பாடிக்கொண்டு, மௌன விரதத் துடன் கோயிலில் அமைக்கப் பட்டுள்ள "வசன மண்டபத்தில்" தங்கி இருந்து நோன்பு நோற் பார்கள். பிரார்த்தனைக்காரர் களும், பிணியுற்ருேரும் மெல் லிய கடற்பூங்காற்றை அனுப வித்து, முறைப்படி தீர்த்தங்க ளில் நீராடி முருகப்பிரானை வழிபட்டு வேண்டுவன முழுவ தும் பெற்றுய்வார்கள்.

கந்தசஷ்டி நோன்பினால் எல்லா நலன்களையும் பெற லாம் என்பதற்கு அநேக உதா ரணங்கள் கூறலாம். கிழவ னாகி விட்ட நாகனும் தத்தை யும் சஷ்டியில் கந்தனை வழி பட்டே கண்ணப்பநாயனாரைப் பிள்ளையாகப் பெற்றனர் இத னைப் பெரிய புராணமும்,

"பொருவரும் சிறப்பின் மிக்கார்
இவர்க்கினிப் புதல்வர்ப் பேறே
அரியதென் றெவரும் கூற
அதற்படு காதலாலே
முருகலர் அலங்கற் செவ்வேள்
முருகவேள் முன்றிற் சென்று
பரவுதல் செய்து நாளும்
பராய்க்கடன் நெறியில் நிற்பவர்".

என்பதனால் அறியலாம்

### செந்திலாண்டவன்

பொதுவாக இவ்விழா முரு கன் கோயில் கொண்டிருக்கும் இடங்களில் எல்லாம் வெகு



திருச்செந்தூர் திருக்கோவில்

கோலாகலமாகக் கொண்டாடப் பட்ட போதிலும், திருச்செந்தூரில் நடைபெறும் ஸ்கந்த சஷ்டி விழாத்தான் மிகவும் முக்கியமானதாகக் கருதப்படுகிறது.

நாட்டின் பல பாகங்களிலிருந்தும் பல்லாயிரக்கணக்கான மக்கள் ஆண்டுதோறும் வந்து கூடிச் செந்தில் ஆண்டவனை வணங்கிப் பேறுகள் பல பெற்றுச் செல்கின்றனர். இது உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை! பல்லாயிரக்கணக்கான பக்தர்களின் அனுபவ பூர்வமாகக் கண்டு வரும் முடிவாகும் இது.

திருச்செந்தில் ஆண்டவன் திருக்கோயிலானது திருநெல்வேலிச் சீமையின் தென்கிழக்குப் பாகத்தில் 38 வது மைல் தூரத்தில் உள்ளது. இங்கு போய் வர ரெயில், மோட்டார் வசதிகள் உண்டு. அழகிய கடற்கரையில் அமைந்துள்ளது இவ்வாலயம்.

செந்தில்ஆண்டவனின் அருள் முழங்கும் ஸ்தலமல்லவா? அடியவர்களின் உடற்பிணியையும் உள்ளப்பிணியையும், ஒருங்கே ஓட்டி நல்லருள் கொழிக்கும் வள்ளற்பெருமான் அங்கே பன்னிரு கைக் கோலத்தனாய் செந்தில் வாழ்வாய் வீற்றிருக்கின்றான்.

தமிழும், தமிழ்நாடும் செய்த தவத்தின் பயனாய் பல்லாயிர ஆண்டுகளாகச் செந்திற்குமரன் நீலக்கடலின் மருங்கிலே தமிழ் நிலத்தைக் காத்து நிற்கின்றான்.

இங்கு மூர்த்தி ஸ்தலம், தீர்த்தம் இவற்றை முறையாகத் தரிசனம் செய்யலாம்.

ஏனெனில், இது ஒரு பழம் பதி! ராமாயண காலத்துக்கும் முற்பட்டதென்னலாம். தலைச் சங்கமிருந்த தென் மதுரையும் அதனைச் சூழ்ந்த நிலங்களும் கடல்களால் அழியவே, "ஆலவாய்" எனப்படும் "கபாடபுரம்" பாண்டிய மன்னர்களுக்குத் தலைநகர் ஆயிற்று. இங்கு இடைச்சங்கம் நிறுவப் பெற்றுப் பாண்டிய மன்னர்களால் புரக்கப்பட்டு வந்ததாக அறிகிறோம், இறையனார் அகப்பொருளுரை மூலம்!

கிழக்கிலும், வடக்கிலும், ஆலயததின் மதிட்சுவர்களை மன்னார்குடா அலைக்கிறது. கடல்களால் மோதப்பெற்று விளங்கிய தலமாதல்பற்றி நக்கீரர் இப்பழம்பதியை "அலைவாய்ச் சேறல்" எனப் பாடினர் போலும்!

முருகப்பெருமான், தேவசேனாதிபதியாகி ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஏழு போகமாய் ஆண்டு, அதிசய பராக்கிரம வீரனாய் யாண்டும் வீறு கொண்டு நின்ற சூரபத்மன், சிங்கமுகன், பானுகோபன் முதலிய அசுர சர்வாதிகாரிகளைச் சங்கரிப்பதற்கு இங்கே தமது சைனியங்களுடன் தங்கி, தளபதியாகிய வீரபாகுவைத் தூதனுப்பிக் காத்திருந்து, பின்கடல் மத்தியிலுள்ள சூரபத்மனுடைய "வீரமஹேந்திரம்" என்னும் கோட்டையைத் தகர்த்து அவனையும் அவன் குலத்தவர்களையும் வேர் அறுத்து, அமரர்கள் இடர் தீர்த்து சிவபூஜை செய்து வழிபட்ட இடமல்லவா திருச்செந்தூர்! ஆதலின் கொற்றக்குரிசில் என வானும் வையமும் இந்தப் பெருமானை வாயார வாழ்த்தி வழிபட்டு வருகின்றன

போர் வீரர்களின் சீர்மைகளைக் குறித்தே இப்பெருமானைப் பலரும் பலவிதமாகப்பாடிப் பணிந்துள்ளனர். இதனால், திருச்செந்தூர் என்னும்



கோவிலின் விமானத்தோற்றம்

சொல்லுக்குப் புனிதமும் வள மும் பொருந்திய "வெற்றி நகர்" என்பது பொருள். "ஜெயந்தி புரம்" என்றும் சொல்வதுண்டு. ஆகவே, நாளடைவில் "செந்தி" என்றும், "செந்தில்", "செந்தூர்" என்றும் திரிந்து வழங்குவது வெளிப்படை.

## ஆலயத்தோற்றம்

முதன் முதலில் கரையோரத்திலுள்ள சிகப்பு செங்கற் பாறைகளை அஸ்திவாரமாகக் கொண்டு, கந்தமாதன பருவ தத்தைக் குடைந்து ஐம்பது அடி உயரத்தில் மூலஸ்தானம் கட்டினார்கள். பிற்காலத்தில்தான் இரண்டாவது, மூன்றுவது பிரா காரங்கள் தோன்றின. இப்பொழுதிருக்கும் ஆலயம் மௌனஸ்வாமி என்னும் பெருந்தகையால் சமீப காலத்தில்தான் ஜீரணோத்தாரணம் செய்யப்பட்டது.

பழமையும், புதுமையும் பொலிந்த தோற்றங்கொண்டுள்ளது. கருங்கற் பணியால் புதுப்பிக்கப்பட்டுள்ளது. இதன் பிராகாரத்தில் பள்ளிகொண்ட பெருமாளும், கஜலக்ஷ்மியும் மலையில் குடைந்த பழைய திருக்கோலத்தோடு வைககப்பட்டிருப்பதை இன்றும் காண லாம். அவைகள் மிகவும் அழகு வாயந்த சிற்பங்கள். அவசியம் பார்க்க வேண்டியவை

கோயிலுக்குச் செல்லும் பாதையில் தூண்டுகை விநாயகர், அகத்தியர் முதலியோர் சந்நிதிகள் உள்ளன பக்தர்கள் யாவரும் தூண்டுகை விநாயகருக்கு விடலைத் தேங்காய் போட்டுவிட்டுத்தான் செந்திலாண்டவனைத் தரிசிக்கப்போவார்கள் வடமலையப்ப பிள்ளை மண்டபத்திலிருந்து "ஷண்முக விலாசம்" வரை பந்தல் போடப்பட்டுள்ளது.

ஷண்முக விலாச மண்டபத்திலிருந்து பிரதான ஆலயத்திற்குப் போகும் வழியிலுள்ள தூண்கள் நல்ல சிற்ப வேலைப்பாடமைந்தவை. நுண்ணிய வேலைப்பாடமைந்தவை என்பது குறிப்பு.

ஆலயம் தெற்கு வடக்காக முந்நூறு அடியும், கிழக்கு மேற்காக இருநூற்றுப் பதினான்கு அடியும் உள்ளது. பிரதான வாயில் தெற்கு நோக்கி இருக்கிறது முதற்பிராகாரம் "சிவிலி" மண்டபம் எனப்படும் தூண்களில் யாளிகள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

அங்குள்ள மண்டபமொன்றில் ஒரே கல்லில் செய்யப்பட்ட மிகப்பெரிதான சுப்பிரமணியர் சிலை மயில் மீது இருந்து அசுரரைத் தாக்கும் கோலத்தில் காணப்படுகிறது. எதிரே சூரபதுமனுடைய மார்பில் வேல் பாய்ந்த கோலத்தில் உள்ளது பயங்கரமாகப் பறக்கும் சேவல் ஒன்றும் எதிரே காணப்படுகிறது. சிலைகள் சிற்பக் களஞ்சியங்களாக விளங்குகின்றன.

## மயனின் சிருஷ்டி

இரண்டாவது பிராகாரத்தில் துவஜஸ்தம்பம் இருக்கிறது. ஆறுமுகப் பெருமான் வள்ளி, தெய்வானை முதலியோரது பஞ்சலோக விக்ரஹங்கள் இங்குள்ள சந்நிதியொன்றில் இருக்கின்றன. ஆலயத்தின் முக்கிய சந்நிதி செந்தில் முருகனுடையது.

கிழக்கு நோக்கி மூலவராக நிற்கின்ற கோலத்தில் எழுந்தருளியிருப்பவர் சுப்பிரமணியர்; கார்த்திகேயன் என்றும் சொல்லுவதுண்டு இவருக்குக் கரங்கள் நான்கு. அபயம், வரதம், ஒரு கையிற் பூ, ஒரு கையில் ஜபமாலை. மூலவருக்குப் பின்னால் ஸ்ரீ ஜகந்நாத சிவலிங்கம் இருக்கிறது. இந்த லிங்கமே முருகனால் பூஜிக்கப்பட்டவர். முருகன் ஆணையை மேற்கொண்டு மயன் இவருக்காகவே ஆலயத்தை சிருஷ்டித்ததாக ஐதிகம்.

இந்தப் பழைய மூலஸ்தானமே பிற்காலத்தில் பாறைகளைக் கொண்டு பலப்படுத்தப்பட்டது என்பர். வள்ளி, தெய்வானை அம்மையார்களுக்கு உட்பிராகாரத்திலேயே தனித்தனிக் கோயில்கள் உள்ளன.

மேலக்கோபுரம் என அழைக்கப்படும் ராஜகோபுரம் யாளி மண்டபத்துக்கு மேல் 137 அடி உயரமும், 90 அடி நீளம், 65 அடி அகலமுங்கொண்டதாயிருக்கிறது. கோபுரம் ஒன்பது மாடங்கள் கொண்டது. ஒன்பதாவது மாடத்தில் "கடிகார மாளிகை" இருக்கிறது கால மணி தெரிவிக்க இது முன்பு பயன்பட்டதென்பர்.

பாண்டியர் காலத்திய கல்வெட்டுகள் ஆலயத்தில் உள்ளன. அவைகள் கோயிலுக்கு அளிக்கப்பட்ட கொடை

களை எளிதில் அறிய உதவு கின்றன. நக்கீரப்பெருமானுக் குக் கோவில் அக்காலத்தில் இருந்ததாக ஒரு சாஸனம் கூறு கிறது.

கி. பி. 1648-ல் முருக னுடைய விக்கிரகம் டச்சுக்கா ரர்களால் கடலில் எறியப் பட்டதென்றும், பின்னால் மது ரையை ஆண்ட நாயக்க மன் னரது பிரதிநிதியாகத் தென் பாண்டி நாட்டைப் பரிபாலனம் செய்த பெரியாராகிய வடம லையப்ப பிள்ளை என்பவ ரால் வேறு விக்ரஹம் பிர திஷ்டை செய்யப்பட்டதென்றும் கர்ண பரம்பரையாகக் கூறப் பட்டு வருவது வெளிப்படை. இது 1653-ல் நடந்தது என ஒரு சாஸனம் கூறுகிறது.

ஷண்முக விலாசத்திற்கு முன் பாக உள்ள கடற்கரையில் பய மின்றி ஆண்களும் பெண்க ளும் குழந்தைகளும் நீரா டலாம். இங்குக் கடலில் ஓரளவு தூரம் வரை பெரும் பாலும் அலைகளின் கொந்த ளிப்போ, இழுப்போ அதிகம் இராது. உல்லாசமாகப் பட கில் போக ஏற்ற இடமாகும்.



நாழிக்கிணறு

இங்குக் கடலோரத்தில் 24 புண்ணிய தீர்த்தங்கள் இருக் கின்றன இவற்றில் எப்போதும் நீராடலாம். அதற்கு ஒரு முறை யும் இருந்து வருவது கண்கூடு. கடற்கரையிலே கட்டப்பட்டுள்ள முசாபரி பங்களாவும், தேவஸ் தான விடுதியும் பிரயாணிகளும், யாத்திரீகர்களும் தங்குவதற்குப் போதிய வசதியுடையவை.

## நாழிக் கிணறு

கோயிலுக்கு முன்புள்ள ஷண் முக விலாசத்திற்கு நேரே சுமார் 200 கெஜ தூரத்திலே "நாழிக் கிணறு" இருக்கிறது. இக் கிணறு செந்திலாண்டவன் தன் வேலால் குத்தவே தோன்றிய தாக ஐதிகம். இது சுமார் ஒரு அடி சதுரமும் ஆறடி ஆழமும் உடையது.

பல்லாயிரக்கணக்கான பேர் கள் இடையறாது நீராடினாலும் குறைவில்லா நிறைவுடன் நன் னீர் இதில் காணப்படும். இதற் குக் கந்த புஷ்கரணி என்று பெயர். நாழிக்கிணற்றைச் சேர்ந்தாற்போல் அமைந்துள்ள கிணற்றில் கந்தவாடையும், உப்புநீரும் இருப்பது இதன் மகிமையை விளக்குகிறது.

பாஞ்சாலங்குறிச்சி வீரபாண் டிய கட்டபொம்மன் நூற்றைம் பது ஆண்டுகளுக்கு முன்பு நிறு விய நகரா மண்டபங்கள் இன் றும் திருச்செந்தூரில் உள்ளன. செந்தில் முருகனுக்கு உச்சிப் பொழுதில் பூஜை முடிந்ததை அறிந்த பின்னரே உணவு உண் பான் கட்டபொம்மன்.

அதனை அறிவதற்குத் திருச் செந்தூரிலிருந்து நாற்பது மைல் தூரமுள்ள பாஞ்சாலங் குறிச்சி வரை இடையிடையே நகரா மண்டபங்கள் நிறுவி முரசங்கள் முழங்கச் செய்து, இறுதி ஒலி கேட்டு உணவு உண்பான். அவ்வளவு முருக பக்தன் கட்டபொம்மன்.

மேலும், பிரதி திங்கட்கி ழமைதோறும் செந்திற்பதியிலி ருந்து பாஞ்சைப்பதிக்கு அஞ்ச லில் இலை விபூதி வரும். அதற் க்காக ஆறு. பஞ்ச கல்யாணிக் குதிரைகள் ஏற்படுத்தி இருந்த தாகச் சரித்திரம் கூறும். இது தவிர ஏராளமான தர்மங்களும் கட்டளைகளும் நிறுவியுள்ளான். இன்றும் அவை நடைபெறுகின் றன.

கோயிலுக்கு வடக்கே, கடற் கரையோரமாகக் கல்லும் மண லும் சேர்ந்த குன்றொன்று கந் தவெற்பின் தொடர்ச்சியில் ஒரு அழகிய குகைக்கோயில் இருக்கி றது. உள்ளே வள்ளி, தத்தாத் ரேயர் முதலானோர் சிலைகள் இருக்கின்றன.

சநநிதியைச் சுற்றி வளைந்த பிராகாரத்தில் மலையைக் குடைந்து வள்ளி சிலையை வைத்திருக்கிறார்கள். இதற்கு முன்னால் பதினாறுகால் மண் டபம் ஒன்றிருக்கிறது. கடல் அலைகள் குகையை அலைக்கும் காட்சி அற்புதமாக அமைந்திருக் கிறது. இது "வள்ளி ஒளித்த வளநாடு" என்று குகைப்புறம் அழைக்கப்படுகிறது.

## திருவிழாக்கள்

பன்னீர் இலை விபூதிப்பிரசா

தமும், மூலவருக்குப் போத்தி மலர்களின் பூஜையும் இவ்வூருக்கு ஒரு தனிப்பெருமையைத் தருகின்றன. இங்கு பிரதி மாசியிலும், ஆவணியிலும் திருவிழாக்கள் நடக்கின்றன.

வைகாசி விசாகத்தனறு பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் பலவகைப்பட்ட அபரிமிதமான காணிக்கைகள் செலுத்திவிட்டுச் சேவித்துச் செல்வர்.

"முருகா" என்று ஓதும் உத்தம அன்பர்க்கு நோய் அணுகாது. வேறு பல துன்பங்களும் அவர்கள் பால் சேரமாட்டா. அம் மாதவ சீலர்கள் காலனூர் சேர்கிலார், வேலனூர் சேர்வார்கள். இதனை,

"முருகா எனவுனை ஓதுந்
கவத்தினர் மூதுலகில்
அருகாத செல்வம் அடையவர்
வியாதி அடைந்துநையார்
ஒருகால முந்துன்பம் எய்தார்
பரகதி உற்றிடுவார்
பொருகாலன் நாடு புகார்
சமராபுரி புண்ணியனே"

என்னும் திருப்போரூர் - சந்நிதி முறையால் எளிதில் அறியலாம்!

இத்தகைய அருள் வடிவான முருகன் அடியார்களுக்குக் காட்சியளிக்கும் முறையையும், அவனது ஆறு முகங்கள் பன்னிரு கைகளின் பெருமைகளையும் நக்கீரர் பெருமான் இனிதாகத் தமது திருமுருகாற்றுப்படையில் கூறுகின்றார்.

"மா இருள் ஞாலம் மறுவின்றி
விளங்க
பல்கதிர்விரிந்தன்றோ
ஒரு முகம்"

கதிரவன் போல் தோன்றி அந்த முகம் அக இருளையும் புறவிருளையும் போக்குகிறது.

"எஞ்சிய பொருள்களை ஒருமுகம்
ஏமுறநாடி
திங்களைப்போல் திசை
விளக்கும்மே"

அறிவுக்கு அப்பாற்பட்ட பொருள்களை உலகம் உய்ய உணர்த்துகிறது, சந்திரனைப் போல! மற்றொரு முகம் "ஆர்வலர் ஏத்த" வரம் கொடுக்கிறது. ஒரு முகம் அந்தணரது யாகங்களைக காப்பாற்றுகிறது. மற்றொரு முகம் துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்கிறது. மற்றொரு முகம்,

"குறவர் மடமகள் கொடிபோல்
நுசுப்பின்
மடவாள் வள்ளியோடு
நகையமர்ந்தன்றே"

என்கிறார் நக்கீரர்.

அவன் திருக்கரங்களும் அடியவருக்கான தொழில்களைப் புரிகின்றன. இவ்விதமாக அழகு, இன்பம், அன்பு யாவற்றையும் பரப்பி அடியவரை ரட்சிக்க முருகன் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கிறான் என்று பாடுகிறார், நக்கீரர் பெருமான்.

"அழகான செம்பொன் மயில்மேல்
அமர்ந்து
அலைவாய் உகந்த பெருமாளே!
இருளாய துன்பம் மருள்மாயம்
வந்து என்னை
ஈர்வது என்றும் ஒழியாதோ?"

என்று மயிலேறும் மாணிக்கத்தை மனமுருகப் பாடுகின்றார் திருப்புகழ் அருணகிரிநாதர் ★

குகைக் கோயிலின்
தோற்றம்



ஷண்முகவிலாச
மண்டபம்

# வடுக நம்பியின் ஆசார்ய நிஷ்டை

திரு. எஸ். இராமசாமி மதுரை.

ஆந்த்ர பூர்ணர் என்னும் வடுக நம்பி ஸாளக்ராமம் என்னும் ஊரில் வாழ்ந்தவர்; அதனால் இவருக்கு ஸாளக்கிராம ஐயன் என்னும் பெயரும் உண்டு. எம்பெருமானாருடைய நல்ல சீடராய், ஐந்தாம் உபாயமான ஆசார்ய நிஷ்டை கைவரப்பெற்றவர் இவர்.

## இவரது ஆசார்ய நிஷ்டை

எம்பெருமானாரின் திருவடி நிலைகள் (பாதுகைகள்) மாத்திரமே இவருக்கு திருவாராதனப் பெருமாள். ஒரு சமயம் இவர் தம் திருவாராதனப் பெருமாளான உடையவர் திருவடிகளையும் உடையவர் திருவாராதனப்பெருமாளையும் ஒன்ருக எழுந்தருளப்பண்ணிக் கொண்டு வந்தார். உடையவர் பார்த்து, வடுகா! இப்படிச் செய்து விட்டாயே!' என்று வருத்தப்பட்டார் அதற்கு வடுகநம்பி 'உங்கள் பெருமாளைக் காட்டிலும், எங்கள் பெருமாளுக்கு என்ன குறை; என்று அருளிச்செய்தாராம்.

பெருமாளுடைய வடிவழகை உடையவர் சேவித்துக்கொண்டிருக்கும் போது, உடையவருடைய வடிவழகை இவர் சேவித்துக்கொண்டிருப்பாராம்.

ஒரு சமயம் பெரிய பெருமாளுடைய திருக்கண்ணழகைப் பாராய்' என்று உடையவர் அருளிச்செய்ய 'என்னமுதனைக் கண்ட கண்கள் மற்ருென்றினைக் காணுவே' என்று அருளிச் செய்தருளினாராம். உடையவரும் 'இப்படியொரு நிஷ்டையா' என்று உகந்து நம்பியை பூர்ண கடாக்ஷம் செய்தருளினாராம்.

எம்பெருமானார் தாம் அமுது செய்தருளிய சேஷப் ப்ரசாதம் ப்ரசாதிக்கும் போது, இரண்டு திருக்கைகளாலும் ஏற்றுக்கொண்டு, ப்ரசாத ஸ்வீகாரம் பண்ணிக்கொண்டு, தம் தலையிலே திருக்கைகளைத் துடைத்துக்கொள்வாராம் வடுக நம்பி. ஒருநாள் இதைக் கண்டு எம்பெருமானார் மிகவும் கோபிக்க, அன்று திருக்கை விளக்கிவிட்டு மறுநாள் உடையவர் பகவத் ப்ரஸாதத்தைக் கோயிலிலே ப்ரஸாதிக்க, அதை அமுது செய்து பின் திருக்கை விளக்கினாராம் வடுக நம்பி. இது கண்டு 'வடுகா! என்ன செய்தாய்' என்று கேட்க, வடுக நம்பி, 'நேற்று அருளிச்செய்தபடி செய்தேன்' என்ருராம். இதைக் கேட்ட உடையவரும் 'உமக்குத் தோற்ருேம்' என்று அருளினாராம்.

ஒருநாள் பெருமாள் திருவீதி எழுந்தருளும் போது 'வடுகா! பெருமாளைச் சேவிக்க வா' என்று உடையவர் அழைக்க, அப்போது உடையவருக்குப் பால் காய்ச்சிக் கொண்டிருந்த வடுகநம்பி 'உம்முடைய பெருமாளைச் சேவிக்க வந்தால், என்னுடைய பெருமாளுக்குப் பால் பொங்கிவிடுமே' என்று அருளினாராம்.

உடையவரின் ஸ்ரீபாத தீர்த்தம் தவிர வேறு ஸ்ரீபாத தீர்த்தம் கொள்வதில்லை என்ற நியதியும் இவருக்கு உண்டு. இத்தகைய ஆசார்ய நிஷ்டையாலேயே இவர் ஆழ்வானையும் ஆண்டானையும் 'இரு கரையர்' என்று அருளிச்செய்வர். அதாவது எம்பெருமானாரே ப்ராப்ய ப்ராபகங்களாய் இருக்கும் போது, மதுரகவியாழ்வாரைப் போல 'தேவு மற்றறியாதவராயிருக்க வேண்டியிருக்க ஆற்றில் ஒருகால் சேற்றில் ஒரு கால்' என்பது போலே இவ்விருவரும் எம்பெருமானையும் பற்றி நிற்பதேன்? என்று அவர்களைச் சிரித்திருப்பர் என்பது கருத்து.





ஸ்ரீசந்திரசூடேஸ்வரர் கோயிலின் ராஜகோபுரம் - ஒசூர்.



# திருமலையில் தங்கு வசதிகள்



திருமலையில் யாத்ரிகர்கள் இலவசமாகத் தங்குவதற்கு மின்சாரம் மற்றும் தண்ணீர் வசதிகளுடன் கூடிய அறைகள் கொண்ட சத்திரங்கள் உள்ளன. இத்தங்கு வசதிகளைப் பெற திருமலை பேருந்து நிலையத்திற்கு அருகே உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தை அணுகவும். மேலும் யாத்தரிகர்கள் ஓய்வு எடுத்துக் கொள்ளும் வகையில் கொட்டகைகள் மற்றும் கூடங்களும் உண்டு. கட்டணம் செலுத்திப் பெறப்படும் தங்கு வசதிகள் மத்திய வரவேற்பு அலுவலகத்தில் செய்து தரப்படும்.

முன்கூட்டியே தங்கு வசதிகளுக்காக பணம் செலுத்திப் பெயர் பதிவு செய்து கொள்ளும் யாத்ரிகர்கள் தங்கு வசதிகளுக்கான கட்டணத்தை காசோலை (D.D.) மூலம் அல்லது மணியார்டர் மூலம் செலுத்தி அக்காசோலையினை அல்லது எம்.ஓ. ரசீதின்ன திருமலைக்கு வரும் தேதி, தங்கும் நபர்களின் எண்ணிக்கை, செலுத்திய தொகை ஆகிய விவரங்கள் அடங்கிய கடிதத்துடன் இணைத்து குறைந்தது பத்து நாட்களுக்கு முன்பேயே, உதவி செயலாட்சித் தலைவர் (Asst. Executive Officer) வரவேற்பு I (Reception I) தி.தி. தேவஸ்-தானம், திருமலை-517504 எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். கடிதப்போக்குவரத்து ஆங்கிலத்தில் இருத்தல் அவசியம்.

## தங்கு வசதிகளுக்கான கட்டண விவரங்கள்:

1) ஹில் வ்யூ பாதிக்குடில்கள், சங்குமிட்டா, சேஷாத்ரி நகர், அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்

| | |
|---|---|
| ஒரு பகுதி (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 15/- |
| எச்.வி.டி.சி. அறைத்தொகுதிகள் (Suites) (ஒவ்வொன்றும்) ஹீட்டர் உள்ளது | ரூ. 25/- |
| எச்.வி.சி. விருந்தினர் விடுதியின் பெரிய அறைத்தொகுதி (ஹீட்டர் உள்ளது) | ரூ. 50/- |
| எச்.வி.சி. விருந்தினர் விடுதியில் சிறிய அறைத்தொகுதி (ஹீட்டர் உள்ளது) | ரூ. 25/- |

மேற்கூறிய தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்தல் வேண்டும்.

2) மங்களபாவி குடில்கள், டி.பி.சி. 3-வது வரிசை முதலியன.

| | |
|---|---|
| டி.பி. வெளிப்பகுதி குடில்கள் (ஹீட்டர் உள்ளது) | ரூ. 60/- |
| வி.வி.சி., எம்பி.சி. 31 மற்றும் 26 | ரூ. 70/- |
| எம்.பி.சி. (ஹீட்டர் உள்ளது) | ரூ. 50/- |
| டி.பி., ஏ.டி.சி. அறைத்தொகுதிகள் (ஹீட்டர் உள்ளது) | ரூ. 15/- |
| ஏ.டி.சி. கீழ்த்தளம், முதல் தளம், 'ஏ' 'பி' 'சி' மற்றும் 'டி' பகுதிகள் (ஒவ்வொன்றும்) | ரூ. 30/- |

ஆர்ஜித சேவை செய்யும் கிருகஸ்தர்களுக்கு மட்டுமே முன்பதிவு

3) எஸ்.வி. விருந்தினர் விடுதி மற்றும் என்.ஜி.ஜி. விடுதியில் உள்ள ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் முன்பதிவு இல்லை. ரூ. 50/-

4) பயணிகள் மாளிகையின்

| | |
|---|---|
| உட்புறக் குடில்கள் | ரூ. 70/- |
| சிறப்பமைப்புக் குடில்கள் | ரூ. 100/- |
| எச்.ஆர்.ஜி. குடில்கள் | ரூ. 250/- |

முன்பதிவு இல்லை. காலியாக இருப்பின் ஒதுக்கப்படும்.

5) ஹில் வ்யூ சொகுசு குடிலில் மோடிபவன்

| | |
|---|---|
| ஓர் அறைத்தொகுதிக்கு | ரூ. 250/- |
| ஸ்ரீநிகேதன் விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒவ்வொன்றுக்கும | ரூ. 250/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. 750/- |
| இந்திரா விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒன்றுக்கு | ரூ. 250/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ.1000/- |
| பாலகுடீரம் ஒரு அறைத்தொகுதி | ரூ. 250/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ.1500/- |
| ஸ்ரீபத்மாவதி விருந்தினர் விடுதி அறைத்தொகுதி ஒன்று | ரூ. 250/- |
| முதல்தளத்தில் பெரிய அறைத்தொகுதி மற்றும் கீழ்த்தளத்தில் அறைத்தொகுதி(ஒன்று) | ரூ. 750/- |
| விருந்தினர் விடுதி முழுவதும் | ரூ. 2500/- |
| கோகுலம் விருந்தினர் விடுதி (குளிர்ச் சாதனம் பொருத்தப்பட்டது) அறைத்தொகுதி (ஒன்று) | ரூ. 500/- |
| ஸ்ரீநிவாசா நிலையம் அறைத்தொகுதி (ஒன்று) | ரூ. 500/- |

ஸ்ரீநிவாசா நிலையம் விருந்தினர் விடுதி

முழுவதும் ரூ.2500/-

வித்யா சதன்

பெரிய அறைத்தொகுதி ரூ. 750/-

வித்யா சதன், மற்றைய அறைத்தொகுதி ரூ. 500/-

கோதாவரி சதன்

அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

காம்பெல் விருந்தினர் விடுதி

அறைத்தொகுதி ஒன்று ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ.1000/-

முன்பதிவு கிடையாது. காலியாகும் தங்கு வசதிகளைப்பொறுத்து ஒதுக்கப்படும்.

தயைகூர்ந்து "உதவி செயலாட்சித்தலைவர், (வரவேற்பு) தி.தி.தே., திருமலை" முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

6) திருமணக் கூடங்கள்

சங்குமிட்டா குடில்கள் கிழக்கு

எண். 272, 260, 266, 267, ரூ. 100/-

டிபி. குடில் எண். 71 வரிசை III

எண்கள் 136 மற்றும் 152 ரூ. 100/-

ரூயா குடில், கோகினேனி குடில்

மற்றும் ஏடிசி. எண். 99 ரூ. 100/-

சிதம்பரம் செட்டியார் குடில் ரூ. 100/-

ஸ்ரீசீதாராம திருமண மண்டபம் ரூ. 1000/-

முன்பதிவுக்கு உதவி செயலாட்சித்தலைவர், (ஆர்.) தி.தி. தேவஸ்தானம், திருமலை எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

ராம் பகீச்சா விருந்தினர் விடுதி

சேஷாத்ரிநகர் விருந்தினர் விடுதி ரூ. 50/-

(அறைத் தொகுதி ஒன்றிற்கு)

விதிகள்:-
* ஒருநாள் என்பது இடவசதி வழங்கப்படும் நேரத்திலிருந்து 24 மணி நேரங்கள்.
* தேவைப்படும் இடவசதி வழங்கப்பட முடியாவிட்டால் வேறு தங்கு வசதி செய்து தரப்படும். இதனால் செலுத்தப்பட்ட தொகை அதிகமாக இருப்பின் வித்தியாசப்படும் தொகை திருப்பித் தரப்படும்.
* கூட்டம் அதிகமாக இருக்கும் நிலைகளில், தங்கு வசதி ஒருநாளைக்கு மட்டுமே வழுங்கபபடும்.
* ஒதுக்கப்பட்ட கால நேரத்திற்கு மேலாக தங்கு வசதிகளைப் பயன்படுத்தினால் நிர்ணயிக்கப்பட்ட தொகையினைப் போல் மூன்று மடங்கு தொகை அபராதமாக வசூலிககப்படும்.
* மேலே குறிப்பிட்டுள்ள கட்டணங்களும், கால நேரங்களும் மாற்றக்கூடியன.

# திருப்பதியில் தங்கு வசதிகள்

## இலவச தங்கு வசதிகள்:-

திருப்பதி இரயில் நிலையத்திற்கு வடக்குப்புறததில் உள்ள ஸ்ரீகோவிந்தராஜ தரமசாலை மற்றும் ஸ்ரீகோதண்டராம தர்மசாலைகளில் மேஜை, நாற்காலி வசதி இல்லாத, ஆனால் சமையல் செய்து கொள்ளும் வசதிகளுடன் கூடிய இடவசதிகள். உள்ளன. யாத்திரிகர்கள் இவ் இடவசதிகளுக்காக தர்மசாலையில் உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தின் கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20991

## மேஜை, நாற்காலிகளுடன் கூடிய இடவசதிகள்:-

ஸ்ரீவேங்கடேஸ்வரா தர்மசாலை (இரயில் நிலையத்திற்கு எதிரில்)

சிறியது ரூ. 20/- பெரியது ரூ. 30/- நான்கு படுக்கைகளைக்கொண்டது ரூ. 40/-

கண்காணிப்பாளரை அணுகவும். தொலைபேசி எண். 20103

இரயில் நிலையத்திற்கு வடக்குப்புறம் உள்ள ஸ்ரீவேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி:

அறைத்தொகுதி ஒன்று ரூ. 30/-

உதவி செயலாட்சித்தலைவர். (வரவேற்பு) திருப்பதி' எனும் முகவரியுடன் தொடரபு கொள்ளவும்.

தொலைபேசி எண். 20166

ஸ்ரீபத்மாவதி விருந்தினர் விடுதி (குளிர்சாதன வசதியுடன் கூடியது) சித்தூர் சாலையில உளளது.

பெரிய அறைத்தொகுதி ரூ. 65/- சிறிய அறைத்தொகுதி ரூ. 40/-

திருப்பதியிலுள்ள உதவி செயலாட்சித் தலைவரை (வரவேற்பு) அணுகவும். தொலைபேசி எண். 20103

# திருமலைநம்பி திருத்தலப் பெருமை

திரு. எம்.எஸ். பிச்சுமணி - பூவிருந்தவல்லி.

**புராண காலத்தில்**

புராணங்களில் மிகப்பழமை யானது வராஹ புராணம். இப் புராணத்திலிருந்து ஒரு சிறு கதை.

உஜ்ஜயிணி என்ற பிரசித்தி பெற்ற நகரத்தில் சோமசர்மா என்ற வேதியர் ஒரு பெரும் வேள்வியை நடத்தி வந்தார். வேள்வியின் போது பல குற்றங்களை செய்ய நேரிட்டது. குற்றம் கண்ட தேவாதி தேவர்கள் சர்மாவை பிரம்ம ராட்சதனாகப் போகும்படி சபித்து விட்டார்கள். சாபம் நீங்க வேதியர் பிரார்த்தித்துக் கொண்டபோது மகேந்திரகிரி சாரலில் சென்று அங்கு அலைந்து திரிந்து கொண்டிருக்கும் சமயம் ஒரு வைணவ பக்தனால் சாபம் நீங்கும் என்று தேவர்களால் எடுத்துக்கூறப்பட்டது.

ஏற்கனவே மகேந்திரகிரி சாரலில், பாணன் குலத்தில் தோன்றிய ஒருவன், எப்போதும் அங்கு நித்ய வாசம் செய்யும் திருமலை நம்பியை கைசிக ராகத்தில் போற்றித் துதித்து வருகின்றார். ஒரு சுக்கில பட்ச கார்த்திகை மாத ஏகாதசியில் விரதம் இருந்து திருமலைநம்பியை வழிபட்டு வரும்போது முன்சொன்ன பிரம்மராட்சதன் தடுத்து வழி மறைக்கிறது. அப்போது அவர்களுக்குள் வாதம் தொடங்குகிறது. பாணன் செய்துவந்த புண்ணிய பலன்களை பிரம்மராட்சதன் கேட்க, பாணன் தன் உடலைத்தான் உனக்குக் கொடுப்பதாக வாக்களித்தேன் என்று வாதாட அச்சமயம் திருமலைநம்பி வேதியர் வேடத்தில் அவ்விடம் வந்து அவர்களுக்குள் சமாதானத்தை ஏற்படுத்தி அவர்களிருவருக்கும் மோட்சத்தைக் கொடுத்தார்

இந்தப் புராண நிகழ்ச்சி இன்றும் கார்த்திகை மாத சுக்கில பட்ச ஏகாதசியன்று "கைசிக ஏகாதசியாக" நாடக ரூபத்தில் நடத்தப்பட்டு வருகிறது. திருமலைநம்பி தன்மீது கைசிக ராகத்தில் பாடி வந்த அந்த பாணர் வம்ச வைணவ பக்தனுக்கு "நம்பாடுவான்" என்ற திருப்பெயரையும் சூட்டி மகிழ்ந்தார். திருமலைநம்பி அருள் பாலித்துவரும் திருக்குறுங்குடித் திருத்தலம் பற்றிய புராண வரலாற்றை வராஹ புராணம் படம் பிடிததுக் காட்டுகிறது.

**இதிகாச காலத்தில்**

திரேதா யுகத்தில் மஹா விஷ்ணு ஸ்ரீராமபிரானாக திருவவதாரம் செய்தார். சீதாப் பிராட்டியாரைக் கைபிடித்தார். கால பலத்தால் சீதையை இராவணன் சிறைவைத்து விட்டான். ஸ்ரீராமபிரான் சீதாவைத் தேடி வரும் காலத்தில் அனுமனின் அன்பினால் சுக்ரீவ சகாயம் ஏற்பட்டது. ராமனும் சுக்ரீவனும் சீதை இருக்கும் இடம் தெரிந்து வரும் பெரும் பொறுப்பை அனுமனிடம் ஒப் படைத்தார்கள.

அனுமன் தென்திசை நோக்கி வரும் சமயம் மிகவும் உயர்ந்த மஹேந்திர கிரியைப் பார்க்கின்றான். அப்போது அனுமன் இதுதான் சரியான இடம் என்று தேர்ந்தெடுத்து மஹேந்திரகிரியின் மீது ஏறி நின்று இராவணன் ஆட்சி செய்யும் இலங்கையைப் பார்வையிடுகிறான். பிறகு இங்கிருந்து இலங்கை சென்று சீதாப்பிராட்டியைச் சந்தித்து சீதாராமனாகக் கண்டு களிப்புற்றான்.

தக்ஷிண பத்ரியான திருக்குறுங்குடியில் மகேந்திரகிரி மலை இருப்பதையும் அனுமன் இம் மகேந்திரகிரி மலையைத் தேர்ந்தெடுத்த விபரங்களை சுந்தர காண்டத்தில் பார்த்து மகிழலாம்.

யுக யுகமாக இத்திருத்தலப் பெருமை பேசப்பட்டு வருகிறது என்பதற்கு இது ஒரு எடுத்துக் காட்டு.

மேலும் உலகில் எங்குமே காணமுடியாத சிங்கவால் குரங்குகள் இந்த மகேந்திரகிரி சாரலில் மட்டும் காணப்படுகின்றன. இது ராமாயண காலத்தில்

அனுமன் இச்சாரலில் இருந்து வந்ததை நினைவு படுத்துகிறது.

### வைணவ ஆசான் காலத்தில்

ஒரு சமயம் வைணவத் திலகமான இராமானுஜர் ஸ்ரீவைணவத்தைப் பரப்புவதற்காக திருவனந்தபுரத்திற்குத் தனது சீடனான வடுக நம்பியுடன் வருகிறார். இதையறிந்த திருமலைநம்பி ஒருநாள் இரவில் ஸ்ரீராமானுஜரையும் வடுகநம்பியையும் மஹேந்திரகிரி சாரலிலிருந்து உருண்டோடிவரும் நம்பிஆற்றங்கரையில் சேர்ப்பித்து விடுகிறார்.

உறக்கம் நீங்கி எழுந்த ஸ்ரீராமானுஜர் தானும் தனது சிஷ்யனும் வந்த இடம் மாறுபட்டு தற்போது இருக்கும் இடம் புதிய இடம் என்பதைப் புரிந்து கொள்கிறார். உடனே வடுகநம்பியை எழுப்பிக் குளித்துவிட்டு வரும்படிக் கட்டளையிடுகிறார். வடுகநம்பி குளிக்கப் போகும் சமயம் திருக்குறுங்குடி நம்பி வடுகநம்பியாக வேடம் தாங்கி ஸ்ரீராமானுஜர் முன்பு பணிவாக நிற்கின்றார். உடனே ஸ்ரீராமானுஜர் வேடம் தாங்கிய வ்டுகநம்பிக்கு தனது திருக்கரத்தால் திருமண் காப்பு இடுகிறார் உடனே அவரையும் அழைத்துக்கொண்டு அருகில் இருக்கும் திருக்குறுங்குடி நம்பி சன்னதிக்கு வந்து சேருகின்றார். அங்குவந்தவுடன் உடன் வந்த வடுகநம்பியைக் காணவில்லை. ஆனால் அங்குள்ள திருக்குறுங்குடி நம்பி எம்பெருமானின் திருமுகத்தில் திருமண்காப்பு பளிச்சென்று தெரி

## கௌரி மந்திர மகிமை

கவிஞர். இராம. சண்முகம் - திண்டிவனம்.

பேரார் மதுரையில் பேசுமறை யோர்குலத்து
ஏரார் *கவுரி யெனும் பெயராள் - சீரார
கவுரியின் மந்திரம் கைவல்ய மாகிப்
புவியினிற் பெற்றாள் புகழ்

*மதுரையில் விருபாக்ஷனுக்கும் சுபவிரதைக்கும் பிறந்தவள்.

புகழார் கௌரியோர் வைணவன் தன்னைப் புரிந்த மணத்
தகவால் அவள்தன் உறவோர் அவளைத் தனியொதுக்கி
அகமே யடைத்தோர் மணமது காண அகன்றுவிடச்
சகமேழ்புகழ்ந்திடும் தேவியை எண்ணித் தனித்தனளே.

தனிமையாய் இருந்திட்ட கவுரிமுன் சங்கரன்
தளர்நடைக் கிழவனாகச்
சார்ந்தனன் பசியது பொறுக்கிலேன் அன்னமது
தந்திடுவை யென வேண்டினான்
வனிதையாள் இல்லமது பூட்டியே இருந்ததால்
வருந்தியே வாடிநின்றாள்
மாதேவ னருளினால் பூட்டது திறந்திட
வகையுடன் சமைக்க லானாள்
பனிமலர் முகத்துடன் பரிமாறும் போதவர்
பால்யனாகத் திகழ்ந்தார்
பதறியவள் நிற்கின்ற போதவள் உறவினர்
பாங்குடன் ஆங்கு வந்தார்
இனிஇதற் கென்செய்வ தென்றவள் நினைந்திட
இளமதலையாய்த் தவழ்ந்தார்
இம்மதலை ஏதென வினாவிய அவர்கட்
கியம்பினாள் அயலதெனவே.

அயலார் மதலையும் ஆய நீயுந்தான்
இயலா தெமக்கென் றியம்பி - நயமார்
மதுரக் கனிமொழி மங்கை மனந்தான்
அதிர அகலுதி யென்றார்

ஆர் கொண்ட கண்ணீர் வடிய மதலையோ டக்கவுரி
வார் கொண்ட வீதிவழியே நடந்திட வானதிலே
சீர் கொண்ட தேவியோ டீசன் விடைமேல்
திகழ்ந்திடலும்
கார் கொண்ட கூந்தலும் தேவியின் பொற்றாள்
கலந்தனளே



தி.தி. தேவஸ்தானத்தாரின்

## ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்.

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்:

காலை

5-00 முதல் 5-30 வரை - சுப்ரபாதம்
5-30 „ 6-00 வரை -ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 „ 6-30 வரை -சுத்தி-முதல்மணி
6-30 „ 11-30 மதியம்-ஸர்வதரிசனம்
11-30 „ 12-30 „ -சுத்தி 2-வது மணி
12-00 „ 6-00 மாலை-ஸர்வதரிசனம்
6-00 „ 6-30 „ -சுத்தி, 3-வது மணி
6-30 „ 9-15 „ இரவு-ஸர்வதரிஸனம்
9-15 „ 9-30 „ -சுத்தி, ஏகாந்தசேவை.

### வெள்ளிக்கிழமைகளில்

காலை

9-00 முதல் 10-00 வரை -அபிஷேகம் (ரூ.100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 முதல் 10-00 „ -அபஷேக தரிசனம்
(ரூ. 2/-நபர் ஒருவருக்கு)

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்-சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | ஆர்ஜித சேவைகள் |
|---|---|---|
| (அ) பொங்கல் | „ ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம்ரூ. 63-00 |
| (ஆ) புளியோதரை | „ ரூ. 100/- | (ஆ) யானை வாகனம்ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | „ ரூ. 75/- | (இ) தோலோற்சவம்ரூ. 160/- (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) |
| (ஈ) கேஸரிபாத் | „ ரூ. 180/- | (ஈ) திருப்பாவாடை ரூ.2000/- (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளி டாலர் கொடுக்கப் படும். |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | „ ரூ. 135/- | |
| (ஊ) தோசை | „ ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலே வாங்கிக்கொள்ள லாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) |
| (எ) ஸாகரபாத் | „ ரூ. 150/- | |
| (ஏ) ஸீரா | „ ரூ. 300/- | |

* திருப்பதியிலிருந்து 5 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதிகளுண்டு.

கிறது. உடனே எம்பெருமானும் எம்பெருமானாராகிய ஸ்ரீராமானுஜரிடமிருந்து திருமந்திர உபதேசத்தை தாசனாக இருந்து பெறுகின்றுர். அன்று முதல் ஸ்ரீவைஷ்ணவ நம்பியாக இத்திருத்தலப்பெருமான் சேவை சாதித்து வருகிறுர்.

மகாபாரத காலத்தில் நரனான அர்ச்சுனனுக்கு நாராயணனான கண்ணன் வடபத்திரியில் உபதேசம் செய்தருளினார்.

இக்கலியில் நாராயணனான திருக்குறுங்குடிநம்பி நரனான ஸ்ரீராமானுஜரிடமிருந்து உபதேசத்தை தக்ஷிணபத்ரியில் பெற்றுக்கொண்டார் என்பதை நினைக்கும் போது இத்திருத்தலப்பெருமை வெளியாகின்றது.

மேலும் ஸ்ரீராமானுஜர் ஏற்படுத்திய திரு ஜீயர் மடம் இன்றும் புகழ் பரப்பிக் கொண்டு வருகிறது. தற்போது 48வது பட்டத்தில் கலியன் ஸ்ரீராமானுஜர் எழுந்தருளியிருந்து திருக்கோவில் நிர்வாகங்களை நடத்தி வருகின்றுர்.

### ஆழ்வார்கள் காலத்தில்

ஒரு சமயம் குருகையூரை ஆண்டுவந்த காரி என்பவர் புத்திரபாக்யம் பெறும் பொருட்டு திருக்குறுங்குடி நம்பியை வேண்டிக்கொண்டார். பக்தனின் வேண்டுதலின்படி திருமலை நம்பி காரி தம்பதியர்களுக்கு குருகையூரில் புத்திரனாக திருவவதாரம் செய்தார். இவரே பிற்காலத்தில் நம்மாழ்வாராக,

வைணவகுல ஆசானாக பிரசித்தி பெற்ருர்.

திருக்குறுங்குடி திருமலைநம்பியை திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், பெரியாழ்வார் போன்ற ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய்துள்ளார்கள்.

இத்திருத்தலத்து எம்பெருமானுக்கு நாற்பது பாடல்களால் ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய்துள்ள பெருமை வேறு எந்தத் திருத்தலத்திற்கும் கிடையாது என்பது மறுக்க முடியாததாகும்.

### கிழமை காட்டும் திருத்தலப் பெருமை

திருமால் நித்யவாசம் செய்யும் திருத்தலங்கள் யாவும் சனிக்கிழமைகளில் ஏற்றம் கொண்டு விளங்கும். புரட்டாசி சனிக்கிழமை திருமலை திருப்பதியில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. அது போல திருமலை நம்பி இருக்கும் இத்திருத்தலம் ஆவணிமாத சனிக்கிழமை பிரசித்தம். ஆவணி மாத கடைசி சனிக்கிழமை உறிகட்டித் திருவிழா இன்றும் பக்தர்களால் நடத்தப்பட்டு வருகிறது. அன்றைய தினம் மக்கள் வண்ணக் கோலங்களில் ஆடை அணிந்து கொண்டு மலை முழுவதும் நிரம்பி வழியும் காட்சி கண் கொள்ளாக் காட்சியாகும்.

கண்ணன் பிறந்த ஆவணி மாதத்தில் இத்திருமலைநம்பி சன்னதி எம்பெருமானை கடைசி சனிக்கிழமைகளில் கொண்டாடுவதை பாக்கியமாகவே கருதுகிருர்கள்.



குமார தெப்பம் - கழுகுமலை.

### வேறு சில பெருமைகள்

திருமலைநம்பி சன்னதிக்குக் கிழக்கே பூதத்தான் என்ற காவல் தெய்வம் உள்ளது. மலைக்குச்சென்று வேலை பார்க்கும் தொழிலாளி இங்கிருந்து ஒரு தடியை எடுத்துக் கொண்டு ஊன்று கோலாகப் பயன்படுத்திவிட்டுப் பின்பு மீண்டும் இங்கேயே அத்தடியைப் போட்டுவிடுவது மக்கள் மத்தியில் நிலைத்து வருகின்றது.

உலக்கை அருவி ஒன்று இத்திருமலைநம்பி சன்னதிக்கு மேற்கே உள்ளது. குளித்து மகிழ நோய்தீர உதவியாக உள்ளது. பார்க்கவேண்டிய இயற்கை சூழ்நிலை நிறைந்த இடமுமாகும்.

ஏழு கன்னிமார்கள் உள்ள இத் திருத்தலத்தில் பால் அபிஷேகம் செய்து வனபோஜனம் நடத்தினால் உடனே மழை பெய்யும் என்ற நம்பிக்கையும் இன்றும் இருந்து வருகிறது.

கடந்த இருநூறுவருட காலங்களுக்கு முன்னால் நம்மை ஆண்டு வந்த கிழக்கிந்திய கம்பெனியார்கள் இத்திருமலை நம்பி சன்னதிக்கு நூறு ஏக்கரா நிலத்தை இலவசமாகக் கொடுத்தார்கள் என்பதை இங்குள்ள ஒரு எல்லைக்கல் காட்டுகிறது.

பங்குனி மாதத்தில் இத்திருமலைநம்பி ஸ்ரீவைணவ நம்பியோடு சேர்ந்து கொண்டு கருட வாகனத்தில் ஐந்து கருட சேவையாக கம்பீரமாகக் காட்சியளிப்பது கண்கொள்ளாக்காட்சியாகும்.

இத்திருக்குறுங்குடித் திருத்தலத்தில் திருமங்கையாழ்வார் திருநாடு அலங்கரித்த திருக்கோவிலும் உள்ளது.

ஜீயர்களை எழுந்தருளப்பண்ணும் திருவரதம் உள்ளது.

இங்குள்ள சிற்பக்கலை மிகவும் அபூர்வம் வாய்ந்தது.

அங்குள்ள இயற்கை சூழ்நிலையில் சிறிது நேரம் தங்கி திருமலைநம்பியைக் கண்டாலே போதும். அதுவே நாம் செய்த பாக்கியமாகும். •••

# செய்திச் சுருக்கம்

### பவித்ரோத்சவம்

திருமலைக்கோயிலில் இவ்வருட பவித்ரோத்சவம் 20-8-91 முதல் 22-8-91 வரை மூன்று நாட்களுக்கு வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட உள்ளது. இவ்விழாவிற்கான அங்குரார்ப்பணம் 19-8-91 அன்று நடைபெறும். மேலும் 20-8-91 அன்று பவித்ர பிரதிஷ்டையும் 21-8-91 அன்று பவித்ர சமர்ப்பணையும், 22-8-91 அன்று பூர்ணுஹுதியும் நடைபெறும். ரூ. 5000/- கட்டணம் செலுத்தி கிருஹஸ்தர்கள் இக்கோயில் விழாவில் பங்கேற்கலாம். மூன்று நாட்கள் நடைபெறும் இவ்விழாவினைக் (ஸ்நபன திருமஞ்சனம்) கண்டு களிக்க கிருஹஸ்தரைச் சார்ந்த 5 நபர்கள் சம்பங்கி பிராகாரத்தினுள் அனுமதிக்கப்படுவர். இறைவனின் திருவீதி புறப்பாடு பின்பு, மூலவர் தரிசனத்திற்கு 5 நபர்கள் அனுமதிக்கப்படுவர். ஒவ்வொரு கிருஹஸ்தருக்கும் பவித்ரம் ஒன்று வழங்கப்படும். கிருஹஸ்தரைச் சார்ந்த இரண்டு நபர்கள் முதல் நாளன்று தோமால சேவைக்கும், இரண்டாம் நாள் அரச்சனைக்கும், மூன்றும் நாள் ஏகாந்த சேவைக்கும் அனுமதிக்கப்படுவர். இப்பவித்ரோத்சவம் நடைபெறும் மூன்று நாட்களின் போது கல்யாணுேத்ஸவம், பிரம்மோத்சவம், வாகன சேவைகள் போன்ற ஆர்ஜித சேவைகள் நடைபெறமாட்டா.

* * * *

### ஸ்ரீசூக்த யக்ஞம்

திருப்பதி அடுத்து திருச்சானூரில் உள்ள தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயிலில் 'ஸ்ரீ சூக்த யக்ஞம்' ஒன்று 27-6-91 முதல் 30-6-91 வரை பெங்களூரைச் சார்ந்த ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமதாண்டவன் ஸ்ரீரங்க ராமானுஜ மஹாதேசிகன் அவர்களின் மேற்பார்வையில் இனிது நடைபெற்றது. 28-6-91 அன்று காஞ்சி காமகோடி பீடத்தைச் சார்ந்த ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளும் திருச்சானூருக்கு வருகை புரிந்து, மேற்படி 'ஸ்ரீசூக்த யக்ஞ' சிறப்பு நிகழ்ச்சியில் பங்கேற்ருர். 1-7-91 அன்று ஸ்ரீமதாண்டவன் சுவாமிகள் திருமலைக் கோயிலுக்கு வருகை புரிந்தார். தி.தி. தேவஸ்தான செயலாட்சித்தலைவர் திரு. எம்.வி.எஸ். பிரஸாத், இணை செயலாட்சித்தலைவர் திரு. என். ஜனார்த்தன நாயுடு மற்றும் பல உயர் அலுவலர்கள் ஸ்ரீசுவாமிகளை எதிர்கொண்டழைத்தனர். சுவாமிகளுக்கு ஸ்ரீசடாரி மரியாதையும், குடை மரியாதையும் வழங்கப்பட்டு சேஷ வஸ்தரம் அணிவிக்கப்பட்டது.

* * * *

### உண்டியில்

பக்தர் ஒருவர் 100 ரூபாய் தாள்களைக் கொண்ட 80 கட்டுக்கள் அடங்கிய ரூ. 8 இலட்சத்தினை 1-7-91 அன்று திருமலைத் கோயில் உண்டியில் செலுத்தியிருந்தார்.

* * * *

### ஸாக்ஷாத்கார வைபவம்

திருப்பதியிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவிலுள்ள ஸ்ரீநிவாசா மங்காபுரத்திலுள்ள ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி கோயிலில் ஸாக்ஷாத்கார வைபவம் 15-7-91 முதல் மூன்று நாட்களுக்கு வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. 15-7-91 அன்று

## விண்ணப்பம்

தி.தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரர் கோயிலில் நடைபெறும் ஆர்ஜித ஸேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராப்ட்' (D.D.) அல்லது 'பேஆர்ட்ர்' (Pay Order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிருர்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்புவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் வேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக்கொள்கின்ரேம்.

தங்கத் திருச்சி வாகனத்தி லும், 16-7-91 அன்று ஹனு மான் வாகனத்திலும், 17-7-91 அன்று கருட வாகனத்திலும் உத்சவர் எழுந்தருளி, திருவீதி வலம் மேற்கொண்டு ஆயிரக்க ணக்கான பக்தர்களுக்கு அருள் பாலித்தது கண்ணுக்கும், கருத் துக்கும் விருந்தாக அமைந்தது. இந்நாட்களின் போது கோயில் வளாகத்தினுள் மாலை நேரங்க ளில் ஊஞ்சல் சேவையும் இர வில் இசை நிகழ்ச்சிகளும் நடை பெற்றன.

* * * *

## ராஜகோபுர பிரதிஷ்டை

விஜயவாடா பூர்ணனந்த பேட்டையில் ஸ்ரீகோதண்டராம சீதாஞ்சநேய சுவாமி கோயி லின் ராஜகோபுர பிரதிஷ்டை 6-7-91 அன்று தலைமை அர்ச் சகர் திரு. ராகவ ஸ்ரீநிவா சன் அவர்களின் மேற்பார்வை யில் நடைபெறறது ரூ. 3 இலட்சம் செலவில் சுமார் 15 மாதங்களில் திரு. காட் டுரு வேங்கடேஸ்வரராவ் ஸ்தப திகளின் மேற்பார்வையில் இவ் ராஜகோபுரம் கட்டி முடிக்கப்பட் டது. இக்கோயில் நிகழ்ச்சியின் போது ஏழை மக்களுக்கு அன் னதானம் வழங்கப்பட்டது.

* * * *

## சொற்பொழிவுகள்

தி.தி. தேவஸ்தானத்தாரின் திவ்ய பிரபந்தத் திட்டத்தின் சார்பில் சென்னை தி நகரில் உள்ள தேவஸ்தான தகவலறி விப்பு மைய வளாகத்தில் 5-7-91 மற்றும் 6-7-91 தேதிகளில் சிறப்பு சொற்பொழிவு நிகழ்ச்சி கள் நடைபெறறன. இச்சிறப்பு சொற்பொழிவு நிகழ்ச்சிகளைத் துவக்கி வைத்த தி.தி. தேவஸ் தான மக்கள் தொடர்பு அலுவ லர் திரு. ஆர். சூர்யநாராயண மூர்த்தி அவர்கள் தம் சிறப்பு ரையில், எதிர்வரும் பிரம்மோத் சவ நாட்களின் போது திரும லையில் 108 திவ்யதேச மூர்த் திகள் பற்றிய பொருட்காட்சி ஒன்று நடைபெறும் என்றும், ஆழ்வார் பாசுரங்கள் அடங் கிய ஒலிப்பேழைகள் விரை வில் வெளியிடப்பட உள்ளன என்றும் கூறினார். மேலும் ஆழ்வார்களின் வரலாறு பற் றிய சிறு நூல்களும் மேற்படி திட்டத்தின் சார்பில் வெளி யிடப்படும் என்றும் குறிப்பிட் டார். இவ்விரண்டு நாட்களின் போது "ஒன்றும் தேவும்", "பெரு மாநீள்படை", "திருவாய்மொழி தமிழ் மறை", "க்ருஷ்ண த்ருஷ்ணு தத்துவம்" எனும் தலைப்புக ளில் ஸ்ரீஉவே. பிள்ளை லோகம் ஸ்தல சயனத்துறைவார் ஸ்வா மிகள், ஸ்ரீஉவே. வி.எஸ். கரு ணுகரன் ஸ்வாமிகள், ஸ்ரீஉவே. என். ஸ்ரீநிவாச ராகவாசார்ய ஸ்வாமிகள், மற்றும் ஸ்ரீஉவே. கே.பி. தேவராஜ ஐயங்கார் சுவாமிகள் ஆகியோர் ஆற் றிய சிறப்புச் சொற்பொழிவு கள் நடைபெற்றன. இறுதி நாளன்று மேற்படி திட்டத் தின் சிறப்பு அலுவலர் டாக் டர் எம். வரதராஜன் அவர்கள் திவ்ய பிரபந்தத்திட்டத்தின் செயல் முறைகளை விளக்கி நன்றி நவின்ருர்.

* * * *

## லக்ஷ்மி பூஜை

நம் பாரத தேசம் புண் ணிய பூமி என்று பலவாருக பல புராணங்களில் சொல்லப்ப டுகிறது. அதன் காரணம் அவ தார புருஷர்களும், ஆன்மீகப் பெருமக்களும் அவதரித்த திருத் தலங்களை நாம் போற்றிப் புகழ்ந்து வணங்கி வலம் வருவ தேயாகும். சமீபத்தில் திருவரங் கத்தில் ஸ்ரீஅரங்கனுக்கு ஆலய கோபுரம் எடுத்து உயர்ந்த ஆசா ரியர் பிரகிருதம் ஸ்ரீஅஹோ பில மடம் அழகிய சிங்கர் ஆவர். அவரது ஆஸ்தான பீடங்களுள் 34வது, 42வது பட்டத்தை அலங்கரித்த, யக்ஞ வேதி என்னும் இஞ்சிமேடு அழ கிய சிங்கர் ஸ்வாமிகள் அவத ரித்த மேற்படி இஞ்சிமேடு கிரா மத்தில் அண்மையில் ஸ்ரீமான் என்.எஸ். நரசிம்மாச்சாரியர் கிரு ஹத்தில் லோக க்ஷேமத்தையும், ஸ்ரீமகாலட்சுமியின் அருளையும் வேண்டி ஸ்ரீமஹாலக்ஷ்மி பூஜை நடைபெற்றது. அதை ஸ்ரீமான் நல்லூர் வி.எஸ். ராகவாச்சார்ய ஸ்வாமி நடத்தி வைத்தார்.

அருளில்லார்க்கு அவ்வுல கில்லை என்றும் பொருள் இல் லார்க்கு இவ்வுலகில்லை என் றும் பொய்யாமொழிப் புலவர் மொழிந்ததற்கு ஒப்ப இவ்வி ரண்டையும் ஒருங்கே எல்லா ஏழை எளியவர்க்கும் அடை விப்பான் வேண்டி ஸ்ரீமான் N.S.V. ராகவாச்சார்ய ஸ்வாமி ஸ்ரீமஹாலக்ஷ்மியின் திருவ ருளை இல்லம் தோறும் ஏற்றி வைத்துக்கொண்டே செல்கிருர்.

இஞ்சிமேடு கிராமத்தில் எழுந்தருளியுள்ள வரதனுக்கும் ஹஸ்த நக்ஷத்திரம் உகந்தது. ஸ்ரீஅஹோபில மடம் 44ஆம் பட்டத்தை அலங்கரிக்கும் ஸ்ரீஅழகிய சிங்கர் அவதரித்ததும் ஹஸ்த நக்ஷத்திரமே. எனவே 'அத்திகிரி அருளாளன்' ஸ்ரீஅழகிய சிங்கர் என்கிற பகவான் ஆசாரியர் திருநக்ஷத்திரத்தில் மேற்படி மஹாலக்ஷ்மியின் வைபவம் நடைபெற்றது மிக்க விசேஷமானது.

மேலும் அன்று இஞ்சிமேடு கோவில் ஆராதகர் இ.மா. ரங்கனாதாசாரியார் "நாமஸங்கீர்த்தனம்" கலியில் எவ்வளவு எளிய மனிதன் உயர்ந்த பகவானை எளிதில் கட்டிப் போட்டு அருள் பெற்றுக்கொள்ள உயர்ந்த சாதனம் என்பது பற்றி சுருக்கமாகத் தெளிவுபட உரை நிகழ்த்தினார். அன்றே ஸன்னதியில் எழுந்தருளியிருக்கும் தேவப்பெருமானுக்கும், தாயாருக்கும் ஸ்ரீஸீதா லக்ஷ்மண ஹனுமத்ஸமேத ஸ்ரீசக்கரவர்த்தி திருமகனுக்கும் திருமஞ்சனம் செய்து, புதிய வஸ்திரங்கள் சமர்ப்பித்து நிவேதனமும் செய்து கோஷ்டி விநியோகம் செய்யப்பட்டது.

தகவல்:- ஸ்ரீமஹாலக்ஷ்மி அருள்பெற்ற ஓர் அக்ரஹாரவாசி - இஞ்சிமேடு.



(3 -ம் பக்கத் தொடர்ச்சி)

மிகச்சிறப்பாகக் கொண்டாடப்பட உள்ளது. தக்ஷிண கங்கை என்றும், கௌதமி கங்கை என்றும் அழைக்கப்பெறும் கோதாவரி நதியானது வடமேற்குப் பகுதியில் அரபிக்கடல் அருகே உள்ள நாஸிக் அருகே பிரம்மகிரி மலையில் தோன்றி சுமார் 1400 கி.மீ. பயணித்து ஆந்திர மாநிலத்தில் அந்தர்வேதி என்னும் இடத்தில் வங்கக் கடலில் கலக்கின்றது. இந்நதியில் இந்நாட்களின்போது மும்மூர்த்திகளும், தேவர்களும், முனிக்கணங்களும், சுமார் மூன்றரை கோடி புண்ணியத்தீர்த்தங்களும் ஒன்று கூடுவதாக நமது புராணம் கூறுவதால் அதுபோது இந்த நதியில் புனிதநீராடுவதும்; வைதிகச் சமயச் சடங்குகளைச் செய்வதும், நதிக்கரைகளில் உள்ள கோயில்களுக்கும் புண்ணிய ஸ்தலங்களுக்குச் செல்வதும் மனிதனுக்கு மனயமைதியினையும், உலக அமைதியினையும், மனித நேய ஒருமைப்பாட்டு உணர்வினையும் ஏற்படுத்தும் என்பது இந்து சமயம் கூறும் அருஞ்செய்தியாகும்.

இதுபோன்ற புனல விழாக்களின் போது மக்கள் ஆயிரக்கணக்கில் கூடிடும் போது இன்றைய நிலையில் மிகவும் தேவையான மனித ஒருமைப்பாட்டு உணர்வும், சமய ஒருமைப்பாடும் ஓங்கி வளரவும் வழிவகுப்பது மட்டுமின்றி, உயிர்களின் உயிர்மூச்சான நிரின் அவசியத்தையும், அந்நீரினைத் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டியதின் முக்கியத்துவத்தையும் நாம் உணரவே இது போன்று நதிகளுக்கு விழா எடுப்பித்தனர் என்று கூறுவதும் பொருத்தமானதே. நீர் அசுத்தமானால் நமது நாளைய தலைமுறையினரின் உடல் வளத்திற்கும், உள்ளத்தூய்மைக்கும் ஊறுதான் விளையும் என்பதை அறிந்து தெளியவே இவ்விழாக்கள்.

இப்பெருமைமிகு விழாவான கோதாவரி நதிக்காகக் கொண்டாடப்படும் இப்பன்னிரண்டு நாட்களின் போது ஆந்திரமாநில அரசும், தி.தி. தேவஸ்தானமும், கூடிடும் யாத்திரிகப் பொதுமக்கள் வசதிகளுக்காக பலவகைகளில் முயற்சிகள் மேற்கொண்டுள்ளன. குறிப்பாக தி.தி. தேவஸ்தானம் இந்நாட்களின் போது ராஜமுந்திரி, கொவ்வூர், கோட்டிபல்லி போன்ற நகரங்களிலும், கிராமங்களிலும் உள்ள கோதாவரி நதித்தீரங்களில் சமயம் மற்றும் கலை நிகழ்ச்சிகளையும், சிறப்புத்தள்ளுபடி சமயநூல் விற்பனை நிலையங்களையும் ஏற்பாடு செய்துள்ளது. இத்தருணத்தினை வாழ்க்கையில் கிடைத்துள்ள ஓர் அரிய வாய்ப்பாகக்கொண்டு பக்தர்கள் கோதாவரியில் புனித நீராடி புண்ணியத்தலங்களுக்கு வருகை புரிந்து இந்து சமய உணர்வும், சமூக ஒற்றுமையும் நாட்டில் தழைத்தோங்க முயற்சிப்பார்களாகுக!

Edited and Published on behalf of the T.T. Devasthanams by K. Subba Rao, M.A., and printed at T.T.D. Press by M. Vijayakumar Reddy, Manager, T.T.D. Press, Tirupati-517 507.

